உ

பரமபதி துணை.

மாக மகத்துவந்தங்கிய

# அகத்தியர்

# வகார சூத்திரம் 200,

## ஷை சுருக்க சூத்திரம் 100ம்

சேர்ந்தது.

திருமங்கலம் தாலுகா பண்ணி குண்டே கிராமம்
சித்தவைத்தியம்
மு. சு. கு. சுந்தர மகாலிங்கம் செட்டியாரவர்கள்
கொடுத்த ஏட்டுப் பிரதியின்படி


மதுரை, புதுமண்டபம் புத்தகசாலை,

இ. ராம.

## குருசாமிக் கோனார்சன்.

ஜி. இராமசாமிக் கோன்.

அவர்களாற்றமது

மதுரை வடக்குமாசிவீதி குருசாமிக் கோனார் தெரு
ஸ்ரீ ராமச்சந்திர விலாசம் பிரசில்,

பதிப்பிக்கப் பெற்றது.

( இரண்டாம் பதிப்[...]டக்கிப்[...]





1956


[...]ப்புமுண்டோ
[...]யி லமர்ந்திட்டேனே. (2)

ஆமர்ந்ததொரு ஆனைக்கல் லறியமாட்டார்
அப்பனே அண்டபிண்ட மறியாமூடர்
சுமந்தபிணம் போல்திரிவார் வேதைகாணார்
சொல்லுகிறே னுப்புவித்தை அண்டஞ்சாக
நமன்கையில் போனஉயிர் மீண்டுதானால்
நந்தீசர் இந்தமுறை நவில்வார்கேளு
சமன்சேர்ந்த சேனீரால் கொல்லுங்கொல்லுந்
தண்டான மதியுப்பே சாரமாமே. (3)

சுத்த கெங்கை.

சாரமென்றுங் காரமென்றும் வழலையென்பார்
தன்னுக்குட் பயனென்றுஞ் சொல்லார்சொல்லார்
பூரமென்று சொல்வதற்குப் பிறவிபேசார்
புகழான மதயானைக் கல்லைப்போசார்
வீரமென்றும் அண்டமென்றும் விள்ளார்விள்ளார்
வேதைகளைப் பாடிவிட்டார் வெகுநூலாக
காரமென்ற கடுங்கார மஞ்சாங்காய்ச்சல்
கம்பியுப்புப் பூரமப்பா அடிதான்பாரே. (4)

அடியென்றும் முடியென்ற மண்டபிண்டம்
ஆகாசஞ் சிவனுப்புக் கம்பியாச்சு
பிடியென்ற சொல்வதற்குத் தலைதெரிக்கும்
பேசாதே மவுனமது பூமிநாதங்
குடியென்று சொல்வதற்குத் தண்ணீருண்டாங்
குலையானை பட்டுவிடுஞ் சாரச்சுண்ணம்
மடியுமப்பா சரக்கெல்லா மிகிலேமாட்ட
மக்களே காயசித்தி மகிழ்ந்துபண்ணே. (5)

பண்ணப்பா உவர்ச்சாரம் பண்டையோர்கள்
பண்பான வழலைநில வுப்பென்பார்கள்
மண்ணப்பா மண்ணென்ற பூத்தானந்த
வழலைக்குப் பேரிதுபோற் பிண்டமாச்சு
விண்ணப்பா தண்ணீராய் மேலுண்டாச்சு
விதமான கல்லுப்புப் பூமிநாதம்

ஒண்ணப்பா சொல்லுகிறேன் § யிந்துனாலே
ஓகோகோ வழலையிட்டாற் கல்தண்ணீரே. (6)

கல்லான கல்லுக்கு உப்புச்சேர்ந்தே
கல்லுப்புச் சுண்ணமென்ற பேரேயாச்சு
சொல்லான யிந்தாலே சூடன்கட்டுந்
துடிவழலைப் பாம்பெனவே சொல்லலாச்சு
வெல்லுகின்ற காரத்தாற் சாரங்கட்டி
வெடிச்சத்தங் கண்டல்லோ மூடிதான்போச்சு
வல்லான புயத்தானை பட்டுதென்றால்
வளமான வாகாச மடிந்துபோமே. (7)

மடியாத யிந்தாலே ரவிதான்கட்டும்
வாதிகாளுங்களுக்கு வழலைச்சுண்ணம்
பிடியானை கைவசங்காண் மதயானைக்குப்
பிரியாத நிலவுப்பின் பெருமைபேசார்
அடியென்றால் வாய்மூடப் பிடரிபேசும்
அப்பனே சுக்கிலத்தை யறியமாட்டார்
படியான உட்கருத்தான் தண்ணீரானல்
பரியாச வேதையிது கொஞ்சந்தானே. (8)

அண்டச் சுண்ணம்.

கொஞ்சமென்று சொல்லாமல் சொல்லக்கேளு
கொடிதான மேல்தோட்டைச் சுண்ணம்பண்ணு
வஞ்சியெனு முட்கருச்சேர் கைமுறையாயாட்ட
மகத்தான வழலையினால் தண்ணீராகுஞ்
சஞ்சீவி கெங்கையப்பா சமூலமெல்லாம்
தாரணியி னுப்பாலே யிவ்வளவுமாச்சு
நஞ்சுகொண்டு செத்தவன்போல் சரக்கெல்லாஞ்சாம்
நயகார சாரத்தால் மெழுகுண்டாமே. (9)

மெழுகாகு முப்பாலே பூரங்கொல்லும்
விடமான பூரத்தால் காரங்கொல்லும்
பழுதான செய்தியல்ல வழலைப்போக்கு
பண்பான ரகசியமிது பூரணந்தான்

§ விந்துனாலே என்றும் மற்றொரு பிரதியி லிருக்கிறது

எழுதரிது என்றாலே முடியாதப்பா
என்னைப்போல் திறமாகச் சொல்லார்சொல்லார்
அழுகாத பிண்டத்தால் வேதைகோடி
அடிமூலம் பூரணத்தா லறிந்துபாரே. (10)

கல்லுப்புச் சுண்ணம்.

அறிவதற்குப் பிண்டத்தின் தோட்டைவாங்கி
அஞ்சிடையாஞ் சீனனுமோ ரொன்றுகூட்டி
வெறிவுகொள்ள வெடியுப்பு ரெண்டுங்கூட்டி
விசையான சத்தியடி யஞ்சும்போட்டு
செறிவதற்கு அறுநீரா லரைத்துலர்ந்தால்
செப்பமுடன் புடம்போடச் சுண்ணமாச்சு
உரிவெண்ணெய் யிதுதானே கல்லுப்பாச்சு
ஓகோகோ கல்லானைக் காரந்தானே. (11)

காரமென்ற கடுங்காரங் கல்லானைக்குக்
கடியதொரு சீனன்வந்து சேர்ந்தபோதே
காரமென்ற கடுங்காரஞ் சொல்லப்போமோ
கல்லுப்புச் சுண்ணமென்றே பேருமாச்சு
காரமென்ற கடுங்காரஞ் சூடனப்பா
காரமிது சேர்ந்தாக்கால் காரசாரம்
வீரமென்று சொல்வதற்கு வாய்தானேது
விள்ளார்கள் பெரியோர்கள் வேதைப்போக்கே.()

சுண்ணத் திராவகம்.

போக்கான செய்தியப்பா சொல்லக்கேளு
பூரணத்தி னுப்பாலே யெல்லாமாகுந்
தாக்கான செய்தியப்பா திராவகந்தான்
தனித்தவெடி யுப்பொன்று பூத்தாரென்று
வாக்கான சூடனென்று கரியுப்பொன்று
வளஞ்சீனக் காரமொன்று சாரமொன்று
நீக்கான ரெங்கொன்று யிந்துப்பொன்று
நீராகச் சம்பழத்தா லரைத்துக்கூட்டே. (13)

அரைத்தமருந் திரவியிலே உலரவைத்து
அப்பனே பொடியாக்கிக் கலசத்திட்டுக்
கரைக்கலசந் தலைமேலே மூக்குக்கீழாய்க்
கைமுறையா யெண்சீலை மண்ணுஞ்செய்து
புரைக்கடங்காப் புகைநீரா மெரியிட்டாலே
போதமுள்ள நீராலே உப்புச்சுண்ணம்
கரைக்குளில்லை கற்பூர மீதிலேறக்
கரையில்லை நிலையில்லை சுண்ணப்போக்கே. ()

சுண்ணமுப்புச் சுண்ணமப்பா சொல்லக்கேளு
துரைவெள்ளை பாசாண மீரஞ்சுக்குச்
சுண்ணமப்பா மஞ்சாடி தடவிச்சென்று
சுண்ணாம்புக் கல்லப்பா மரக்கால்பத்து
எண்ணமுள்ள தாளம்பால் மரக்கால்பத்து
யிதைநீற்றப் பாசாணங் கட்டிப்போச்சு
உண்ணுவது தாம்பிரமது களஞ்சிக்கேதான்
ஒருமஞ்சாடி கொடுக்க வெள்ளியாமே. (15)

கட்டுத் திராவகம்.

ஆமப்பா ஒன்பதரை தப்பாதுண்மை
அதில்சுண்ணத் திராவகந்தான் சொல்லலாச்சு
நாமப்பா கண்டபடி சொன்னேஞ்சொன்னேம்
நயமான கட்டுவகைத் திராவகமேகேளு
யேமப்பா அரிதாரஞ் சூடன்சீனம்
ரெங்குபொரி காரம்பூரம் வீரஞ்சாரம்
ஆமப்பா வகைக்கொன்று திராவகந்தான்
அரகரா கட்டுவகைத் தண்ணீர்தானே. (16)

மெழுகுவகைத் திராவகம்.

தானென்ற நீர்தனிலே சகலமெல்லாந்
தட்டுண்டு சாகுமப்பா மெழுகுபண்ணு
யேனென்ற மெழுகுவகைத் திராவகந்தான்
எழிதல்ல துரிசுபூ நீருவீரஞ்

சீனமொடு வெடியுப்பு மடர்ப்பூரந்தான்
சேர்க்கையிது களஞ்சியொன்று வகைவீதந்தான்
ஊனுறவே நுணுக்கியொரு கலசத்திட்டு
உத்தமனே யெரியிடவே தீநீராமே. (17)

சேந்தூரத் திராவகம்.

தீநீராங் கட்டினதோர் சரக்கெல்லாந்தான்
திரமாக மெழுகாகும் வேதைகாணும்
ஆனதொரு தீநீரின் வகையைக்கேளு
அப்பனே வழலையொடு வீரம்பூரம்
மூனுன கெந்திமால் தேவிலிங்கம்
உத்தமனே வெடியுப்பு அன்னபேதி
தானவனும் புகைநீரைப் பேசப்போமோ
சகலசரக் கெல்லாஞ்செந் தூரந்தானே. (18)

குரு முடிக்க.

தூரமென்ற தூரமல்ல சொல்லக்கேளு
துடியான வெடிச்சத்தங் கண்டாலாச்சு
பாராமல் குருமுடிக்க வப்பாகேளு
பாழிலே கரிச்சுட்டுப் போகாதேநீ
சாரமென்ற கல்லானை பட்டுப்போனுல்
கடுஞ்சார மிந்தாலே கட்டிப்போச்சு
ஆரமிட்ட கருங்கல்லு பேசவில்லை
அப்பனே ஆருனைக் காதியாமே. (19)

முப்பூப் பிறவி.

ஆதியென மூலமப்பா சத்தியாச்சு
அருளான பிண்டமப்பா ஆனைக்கல்லு
பாதிப்பிறை யிந்தாலே வழலையாச்சு
பானென்ற பூவாலே சித்தியாச்சு
சோதியிட்டுப் பூரணத்தால் விரைத்துப்போச்சு
சொல்லுவது கடுங்காய்ச்ச லானதாலே
நீதியென்ற வாதமெல்லாந் துலங்கலாச்சு
நேரான பூரணத்தி லிருந்துபாரே. (20)

முப்பூக் கட்டு வேதை.

இருந்துரைத்தார் சமாதியிலே திங்களொன்று
இரண்டுதிங்கள் சென்றவுடன் கல்லுப்பாச்சு
அருந்தவத்தார் பெரியோர்கள் சொன்னார்காணும்
அப்பனே பூவெடுக்க வாழ்ந்தமூர்த்தி
பொருந்துவது பூவாலே கட்டிப்போச்சு
பூரத்தால் முழுக்கட்டுக் கண்டதாச்சு
திருந்துவது பெண்ணென்றே ஆணைக்கூட்டிச்
சேர்த்தார்கள் கைமுறையாய்ச் செனித்தவாரே. ()

வாருகொண்ட முப்பூவே குருவே அய்யா
மகத்தான குருவாலே பூரச்சுண்ணம்
யேருவது கல்லானைச் சகட்டின்மேலே
யிந்தாலே பூரணமாய்ச் செயநீராச்சு
ஊறுவதுக் கூரணிதா னுப்புங்கட்டும்
ஓசையிட்ட வீரமிட வேதையாகுந்
தேறுவது கோடான கோடிக்கப்புந்
திறமான வேதையப்பா மலைபொன்னுமே. ()

புத்தி கூறல்.

பொன்னான தோர்கார சாரமாகும்
பூமியுவர்ச் சாரமப்பா பூமிநாதம்
மின்னான பூவாத்தாள் வெள்ளைமூர்த்தி
வீறுகளையே கொடுக்கும் பூரணந்தான்
சொன்னக்கால் தோணுமப்பா நூலைப்பார்த்துக்
குறைகாணு மடையரைப்போல் சுடாதே நீதான்
சன்னசங் கொண்டதொரு வீணர்போலச்
சலித்துமே போகாதே குருவைத்தேடே. (23)

குருவான பெரியோர்கள் தன்னைச்செங்கை
கூப்பியே தெண்டனிட்டுச் சீசனாகித்
திரிவதனார் சிந்தைதனைச் சோதிப்பார்கள்
திடமான சிந்தையுற்று மிருந்தாயானால்

தருவிப்பார் வாதமெல்லாஞ் சீடனென்றே
சகலகலைக் கியானமெல்லாந் தானேதங்கும்
அருளாகும் பொருளாகு மாசான்றன்னை
அடிபணிந்தா லடிமுடியு மறிவிப்பாரே. (24)

முப்பூத் தீட்சை.

அரிவதற்குக் குருசொல்லார் பாடல்தோறும்
அப்பனே கருவறியார் மூடவாதி
செரிவதற்கு உவர்ப்பூவாம் வேதையாச்சு
சென்றதோர் காய்ச்சும்வகை சொல்லக்கேளு
உரியில்வெண்ணெய் தனையுருக்க நெய்யாய்ப்போகும்
உத்தமனே வழலையெனுஞ் சாரம்பாரு
யிருகியப்பா யிந்தாலே குருவாய்ச்செல்லும்
எதிரிட்டுக் கொல்லுமப்பா உப்புத்தானே (25)

பூமிநாதப் பெருமை.

உப்புநீ ருப்புமல்ல சொல்லக்கேளு
உவர்களிலே விளைந்ததொரு அடிதானப்பா
உப்பொன்று அதுக்கடுக்க வாழ்வாரப்பா
ஓகோகோ அலைநீரி லுப்பதொன்று
மூப்பூவுங் கூட்டியல்லோ குருவாய்ப்போச்சு
மூழக்கா ரந் துறையேலே யேறலாச்சு
உப்பான வழலையிது பூரணந்தான்
உயர்ந்தவெடி யாகாச உப்புச்சாமே. (26)

சாகுமப்பா கற்பூரஞ் செத்துப்போச்சு
தனிப்பூரங் கல்லானே வழலைக்காச்சு
போகுமது ஆனையப்பா பட்டுப்போச்சு
பூரணத்தி னிந்தாலே ரவிதான்கட்ட
வேகுமப்பா சரக்கெல்லாங் கண்டபோதே
வெடியுப்புத் தாயான மூலமாச்சு
ஆகுமப்பா யித்தனையு மூவர்தன்னாலே
ஆதித்தன் கண்டல்லோ சோதியாச்சே. (27)

முப்பூ விபரம்.

சோதியாஞ் சிவமான நிலவுப்புத்தான்
சொல்லுவது வழலையுப்பு மவுனமாகும்
ஆதியிதை யறிந்தவனே மூர்த்தவாதி
அப்பனே யாகநீ ருப்பாலாச்சு
வேதையென்ற பொருள்களெல்லா மூப்பூவாகும்
விமலனார் வழலையுப்பை யறியமாட்டார்
பூதலத்தில் மானிடரோ காணப்போறார்
பொற்பூவின் வாசனைதான் கல்லுப்பாமே. (28)

கல்லுப்பு நல்லுப்பைக் கட்டிக்கொல்லும்
கல்லானை பட்டுவிழக் கருவுண்டாகும்
வல்லமையாம் முப்பூவு முடித்தாயானால்
மகத்தான கல்லானை பட்டுப்போகும்
சொல்லார்கள் சொல்லார்கள் யெரியோரையா
சுத்தரவி வழலையுப்புச் சொல்லுங்காணார்
யெல்லாருங் கண்டதுவே யாகநீரு
ஏகவெளி சிவமறியார் கல்லுப்பொன்றே. (29)

கடுங்காரச் செயநீர்க்குரு.

கல்லுப்புக் குருவாலு லானைக்கல்சாம்
கடுங்கார மேறுதற்குப் பூமிநாதம்
சொல்லக்கேள் நீராலே சுத்திபண்ணு
துடியான கல்லானை சுத்தியாச்சு
அல்லக்கேள் சீனமொன்று மூப்பூவொன்று
அடங்காத ஆகாச வெடியுப்பொன்று
வல்லொத்த சூடனொன்று பச்சையொன்று
வளமான துரையண்டச் சுண்ணம்ரெண்டே. (30)

ரெண்டுடனே காந்தமொன்று சிப்பிபத்து
நேராக யிதையாட்ச் சம்பளத்தால்
ரெண்டுச்சாண் புடம்போடச் சுண்ணவேகம்
நாதமது முப்பூவா லித்தனையுமாச்சு

உண்டுகொண்டு உட்கருதான் சரியாய்த்தூக்கி
ஒன்றாக விரவிப்பீங் கானில்வைத்துப்
பண்டான ஆகாசஞ் சீனமோடு
பழச்சாற்றில் மோர்கூட்டப் பூரமாச்சே. (31)

சூடச் சுண்ணம்.

ஆச்சப்பா வழலையிது சுண்ணம்பண்ண
அப்பனே துரையண்டஞ் சீனமோடு
வாச்சப்பா சாரமிட நீருய்ப்போகும்
வளமாகச் சூடனுக்கு அங்கிபூட்டிக்
காச்சப்பா கல்லானைத் தோட்டுக்குள்ளாய்க்
கைமுறையா யூகிவாச் சுண்ணமாகும்
வாச்சதொரு பீங்கானி லிந்து நீர்தான்
வலமாக அஞ்சுசுண்ண மேவியாடே. (32)

ஆடினு லிந்தாலே செலமாய்ப்போச்சு
அப்பனே மதயானை பட்டுப்போச்சு
தேடினல் வாராது சோதியப்பா
திறமான நீருக்குப் பேர்தான்கேளு
ஓடுகிற பாம்பாகும் வழலைப்பாம்பு
உத்தமனே யிந்தாகும் பூரணந்தான்
சாடுவது பூரத்தார்க் காரசாரம்
தனிமுப்பூ வாதியென்ற குருவதாமே. (33)

குருவான நீராலே சுண்ணங்கோடி
கொண்டதொரு செந்தூரங் கோடாகோடி
குருவான நீராலே கட்டுக்கோடி
குகைதனிலே யாடுதற்குக் களங்குகோடி
குருவான நீராலே செயநீர்கோடி
குறிப்பான சாரணையுங் குளிகைகோடி
குருவான நீராலே யோகஞ்சித்தி
கொடுஞ்சுருக்குக் கொடுஞ்சுருக்கு வழலைதானே. ()

தாமென்ற யிந்தாலே யித்தனையுமாச்சு
தனிப்பூரச் சுண்ணத்தா லாடலாச்சு
யேனென்று பேசுமிது வழலையப்பா
யேகாங்கி யாய்க்குகையி லிருக்கவேணும்

பானென்ற தடங்காட்டிச் சரக்கையெல்லாம்
படுமுன்னே கொன்றுவிடும் பாவியுப்பு
நானென்ற அகம்பிடித்தால் தலைதெரித்துப்போம்
நாட்டரச னென்று பேருண்டே. (35)

அரிதாரச் சுண்ணம்.

ஊனென்ற வஸ்துவப்பா வழலைச்சுண்ணம்
ஓகோகோ நீரானாற் பூரணந்தான்
தேனென்ற மனோன்மணியா ளீன்றநாதம்
செப்பரிது செப்பரிது வழலையுப்பு
தீனென்ற வழலையிலே வீரங்கூட்டித்
திறமாகத் துருசாட்டச் சுண்ணமாச்சு
கோனென்ற வராட்டியனை வீரஞ்சேர்த்துக்
கொள்கையாய் மால்தேவிக் கங்கிபூட்டே. (36)

வேதை.

பூட்டவே தாளகந்தான் சலவையாச்சு
பொன்னிமிளை யிதினாலே சுண்ணமாச்சு
ஆட்டுவது நவச்சாரஞ் சுண்ணமாச்சு
அப்பனே காந்தத்தால் துருசு நீரும்
கூட்டுவது சிங்கியப்பா குளிகையாகுங்
கோவான சூதமது தங்கத்தூட்டு
ஊட்டினா லஞ்சுசுண்ணக் குகையிலாட்டு
ஓகோகோ சுண்ணமிது மலைபொன்னாமே. (37)

ஆமப்பா சுண்ணமெல்லாந் தனித்தனியேவேதை
ஆகாச உப்பாலே யித்தனையுமாச்சு
நாமப்பா கண்டபடி சொன்னேன்கேளு
நலம்பெரிய வழலையுப்புக் காரசாரம்
வாமப்பா பூசையிடச் சித்தனாவான்
வழலையுப்பை யறியாட்டால் வாதியாகான்
சாமப்பா சரக்கெல்லாங் கட்டுமுன்னே
தனியான வழலையினா லெல்லாங்காணே. (38)

எல்லாருங் காணாத மூப்பூவப்பா
யிருதயத்தி லுப்பறியா மூடவாதி
சொல்லார்கள் பெரியோர்கள் மதயானைக்குச்
சுகமான சகடுவைத்து ஏறுதற்கு
நல்லதொரு குருசொல்லக் காணவேணும்
நட்பில்லான் நாய்போலே அலையவேணும்
வல்லமையால் முடியாது வழலையுப்பு
மகத்தான காரமிது சாரந்தானே, (39)

காரமேன்ற சிப்பிச் சுண்ணம்.

சாரமென்ற ஆகாசச் சரக்கதாகுந்
தனிப்பிறவி யடிமூலம் பூமிநாதம்
வீரமென்ற யிப்பூவா லானைக்கல்சாம்
வேதாந்தத் துள்ளிருக்கும் ரவியுமிந்துங்
காரமென்ற சுண்ணமப்பா சிப்பிச்சுண்ணங்
கடுங்கார மூவர்ச்சாரம் பூமிநாதம்
பூரமென்று சொல்லுதற்குப் பெரியோர்சொல்லார்
புகழான தென்னூலின் புகழைப்பாரே. (40)

பாரப்பா கல்லானைச் சுண்ணமுடன்வீரம்
பரிவான பச்சைக்கே யங்கிபூட்டிச்
சீரப்பா பூவாலே புடத்திலேறச்
செல்லப்பா திருசுடனே வீரங்கூட்டிச்
சேரப்பா தாளகத்தைப் பொஇந்துலூது
செப்பரிய வங்கமது சுண்ணமாகும்
ஆமப்பா வங்கமதில் வீரங்கூட்டி
அப்பனே வங்கத்தைச் சரியாயாட்டே. (41)

96 சரக்குகளை ஈயமாக்கும் வங்கச்சுண்ணம்.

ஆட்டியே புடம்போட யீயமாகும்
அந்தமுறை பாசண மீயமாகும்
பூட்டுவாய் தாளகமு மீயமாகும்
புகழ்பெரிய லோகமது ஈயமாகும்
மூட்டுவாய் மடலீயங் கல்லுப்பீயம்
முத்தியஞ் சங்கீயம் லிங்கமீயம்

பூட்டுவாய் நவச்சார மீயமாகும்
பொன்னிமிளை யீயம்பொன் னீயந்தானே. (42)

பொன்னீயம் வெள்ளீய மாகும்பாரு
புகழான நவலோக மீயமாம்
வண்ணமுள்ள நவரெத்தினம் ஈயமாகும்
வாய்த்ததொரு உப்பெல்லா மீயமாகும்
நன்னயஞ்சேர் சரக்குவகை யறுபத்திநாலும்
நவரெத்தினம் நவலோகம் பதினெட்டாகும்
சொன்னதி ரேழுமே உபரசங்கள்
தொண்ணூற்றூர் சரக்கெல்லாஞ் சொல்லலாச்சே.

உபரசம்.

ஆச்சப்பா உபரசத்தின் வகையைக்கேளு
அண்டமொடு பிண்டமொடு நண்டுவண்டு
வாச்சப்பா பூநாகம் வேங்கைப்பல்லு
வாய்த்ததொரு கரிக்கோடு கண்மழுங்கும்
பேச்சப்பா கருங்காக்கை மண்டையோடு
பெரியதொரு கரிக்குருவி யங்கத்தோடு
யேச்சப்பா செங்கழுகு பித்துசங்கு
யிணையான செம்பருந்தின் கண்ணுங்கூட்டே. ()

ரசகுளிகை சாரணைவிபரம்.

கூட்டுவது சாரணையின் வகையைக்கேளு
கூறுய்தொண்ணூற்றூறு வகையுங்கொண்டு
ஆட்டுவது முன்சொன்ன வங்கச்சுண்ணம்
அழகான வீரமிட்டு வெவ்வேறுட்டிச்
சாட்டுவது வில்லைதட்டிச் சவ்வாதுபூசித்
தானுருக்க ஈயமப்பா தொண்ணூற்றுறும்
மூட்டுவது ரசங்கட்டிக் குளிகைசெய்து
முக்கியமுடன் சாரணைக்கு வகைசொல்வேனே. ()

சொல்லக்கேள் மஞ்சாடி பன்னிரண்டு
சூதமது உருகையிலே சொல்லியாடும்
அல்லத்தொண் ணூற்றூறு சரக்கீயத்தை
அழுகாய்த்தொண் ணூற்றூறு மாவுங்கூட்டி.

வல்லமையா யுருக்கியெடு குளிகையாகும்
மகத்தான சாரணையின் வகைதானப்பா
செல்லப்பா சாரணையைச் சென்றுபாரு
சென்றவுடன் குளிகையது ககெவுனமாமே. (46)

சாரக்கட்டுச் சுண்ணம்.

ஆமப்பா வழலையொன்று அண்டமாறு
ஆட்டிவில்லை ரவிகண்டா லூதிப்போடு
ஆமப்பா வழலையொன்று சிப்பிஆறு
அந்தவகை யாகவே யூதிப்போடு
ஆமப்பா வழலையொன்று நண்டுஆறு
அதிகமா யூதிவரச் சுண்ணமாகும்
ஆமப்பா வழலையொன்று நத்தைஆறு
ஆட்டவே சுண்ணவகைச் செயநீர்தானே. (47)

அஞ்சு சுண்ணக் குகை.

தானென்ற கல்சுண்ண மாறுங்கூட்டிச்
சமனாக அஞ்சுசுண்ண வகையுஞ்சேர்த்து
வானென்ற வெண்கருவைத் தண்ணீராக்கி
வண்மையுட னஞ்சுசுண்ண வகையுமாட்டி
யேனென்ற குகைபிடித்து வைத்துக்கொண்டு
யெடுத்ததொரு சுண்ணமெல்லா மிதிலேயூது
தானன்றாய்ச் சொல்வதல்லால் மற்றோர்சொல்லார்
நாகத்தி னூட்டுவகை சொல்லக்கேளே. (48)

நாகக் கட்டுச் செந்தூரம்.

கேளப்பா சுண்ணத்தின் திராவகத்தால்
கிருபையுள்ள நவச்சாரந் தன்னையாட்டி
கேளப்பா நாள்மட்டு மாட்டிச் சென்றால்
யெடுத்ததொரு சாரத்தை வில்லைதட்டிச்
சூளப்பா ஓட்டில்வைத்துப் புடத்தைப்போடு
சொல்லரிது சாரமிது கட்டிப்போச்சு
வாளப்பா பீங்கானில் நீரதாச்சு
மகத்தான நாகமதை யுருக்கிச்சாயே. (49)

சாயப்பா அஞ்சுதாஞ் சாய்க்கவேதான்
தட்டுண்டு போச்சுதப்பா நாகங்கட்டி
நேரப்பா செந்தூரத் திராவகந்தான்
நீதியுடன் நாகத்தில் சுருக்குத்தாக்க
வாயப்பா மலர்ந்துதான் முருக்கம்பூப்போல்
வளமான செந்தூர மாகும்பாரு
நீயப்பா நவலோகம் களஞ்சியொன்றில்
நிசமாக மஞ்சாடி கொடுக்கமாத்தே. (50)

சீனக் கட்டு.

மாத்தெட்டுக் கண்டுதப்பா சீனக்காரம்
வளமான சார நீர் சுத்தியாட்டு
சாத்தெட்டு ளுள்குத்திச் சென்றதாறு
தட்டுண்டு சீனத்தான் கட்டிப்போவான்
போத்தண்டன் யிக்கருவை வகையாய்க்கேளு
புகழ்சாரங் கட்டினதுங் காரமுந்தான்
நீத்தண்டச் சரியிடையாய்க் காரசாரம்
நேராக மூப்பூவுங் கூட்டிவையே. (51)

வையப்பா பச்சைநவச் சாரங்கூட்டி
வைக்கவே மகத்தான செய நீராகும்
மெய்யப்பா அறுபத்தி நால்சரக்கும்
யிந்த நீ ராலேதான் மெழுகதாகும்
செய்யப்பா நவலோகம் வேதையாகும்
திடமான தூபமுதற் பரிசமாகும்
தொய்யப்பா சத்துமுமாங் கனமுமாகும்
தோன்றுவது பதினாறு மாத்துத்தானே. (52)

64, சரக்குக்கும் ஏகாந்தத் தயிலம்

தானப்பா சரக்குஅறு பத்துநாலுந்
தனித்தனியே மெழுகாக்கிக் களஞ்சிவீதம்
பூணப்பா வில்லைதட்டிக் கலசத்திட்டுப்
புதுமையாய்ப் பாதாளந் தன்னில்வைத்து
நீணப்பா மேல்மூடிச் சீலைசெய்து
நிசமாகத் தியாட்டத் தயிலமாகும்

ஆணப்பா பீங்கானி லிறக்கிவைத்தே
அனலாறி மாறினபின் னெடுத்துப்பாரே. (53)

ஏகாந்தத் தயிலக் கற்பம்.

யெடுத்தபின்பு நிறுக்கயிடை சரியாய்க்காணும்
யேகாந்தத் தயிலமிது யாருஞ்செய்யார்
தொடுத்ததொரு காரியங்க ளெல்லாம்வெல்லுஞ்
சொல்லுதற்கு வேதையிது மலைபொன்னாகும்
அடுத்ததொரு வினைகளில்லை பயமுமில்லை
அறுபத்து நால்கோடி ரிசிகளாலுந்
தடுத்ததொரு சாபமில்லை சூலன்காலன்
சாபத்தால் பயமுமில்லை தயிலங்கொள்ளே.(54)

நூற்றெட்டுக் கற்பங்கொள்ள.

கொள்ளப்பா மண்டலந்தான் ஒருமாவீதம்
கொண்டாக்கால் சிவனவனுய்க் கூடிவாழ்வன்
கொள்ளப்பா கற்பமிது கொண்டாயானல்
கோடியுகஞ் சென்றிலுமோ சாவில்லைதான்
கொள்ளப்பா கற்பவகை நூற்றெட்டுந்தான்
கொண்டாக்கா லவன்யோகி யவனேஞானி
கொள்ளப்பா வல்லாரைக் கற்பங்கொண்டு
கொள்ளப்பா மறுகற்பங் கொண்டுபாரே. (55)

பாசாண வர்ணம்.

பாரப்பா வழலையிலே வீரங்கட்டிப்
பண்பாகக் கெந்தகத்துக் கங்கியூட்டி
நேரப்பா கட்டுவகைத் திராவகத்தைக்குத்தி
நிசமாகத் தீயாட்டத் தந்தம்போல்கட்டும்
சேரப்பா மெழுகுவகைத் திராவகத்தைக்குத்தித்
தீயாட்ட மெழுகாகுஞ் செம்பில்வேதை
பாரப்பா யிதின்மாத்துப் பதின்மூன்றாகும்
பாசாண வர்ணமென்ற பேரதாமே. (56)

பாசாணக்கட்டுச் செந்தூரம்.

தானென்ற பாசாணந் தன்னைக்கட்டத்
தாரணியில் வாதிகளோ அறியப்போரார்

பாரனென்ற உப்பையிரை யளவாய்க்கொண்டு
பாசாணத் தில்பூசி மத்தங்காய்க்குள்
நாமென்று முன்சொன்ன படியேநீற்ற
ராச்சியத்தி லில்லாத கட்டிதாகும்
யேமென்று யீரஞ்சு தரமேநீற்றி
எடுக்கப்பண் பென்னபா சாணந்தானே. (57)

பாசாணங் கட்டினதை யெடுத்துக்கொண்டு
பண்பான செந்தூரத் திராவகத்தால்
கூசாமல் சுருக்கிட்டவே செந்தூரந்தான்
கொண்டதிலே ரசத்தைமெள்ளக் கொடுத்துத்தா
பூசவே வேதையிது தீயில்காட்டப் [க்கு
பொன்பசும்பொன் பத்தரையாய்ப் பூட்டியாடும்
நேசமுடன் நவலோகம் நிசமாயாடும்
நீதியுள்ள பாசாணப் போக்குத்தானே. (58)

புத்தி.

தானென்ற மூலத்தை யறியவேணும்
சகடுவைக்குங் கல்லானே காணவேணும்
வானென்ற பூரணத்தைக் காணவேணும்
வளமான அட்டசித்தி யறியவேணும்
நானென்ற கோசமிது பீசமாகும்
நலமில்லாத் தீவினையின் பிறப்பறுக்கும்
யேனென்று பேசுதற்குப் பஞ்சமித்திரம்
யெழுபிறப்புக் கல்லானைக் கொண்டவாரே.(59)

வாரான சுக்கிலத்தைக் காணமாட்டார்
மாடுபோல் நீரைவிடக் காண்பார்மாண்பர்
தேனான வண்ணானை யறியமாட்டார்
சிதருப்புக் குருவெனவே சென்றுபார்ப்பார்
ஆரான மித்திரமே சத்தியாகும்
அடங்காத நீலியப்பா அடியைப்பாரு
போரான பூரணியாம் மனோன்மணிதான்
பெற்றீன்ற நாதமது தேனுமாமே. (60)

தேன்மொழியாள் பூரணத்தி லுயரவேறித்
தேரோட்டம் போலவே சூதந்தன்னைத்
தான்மொழியக் கைமுறையாய்ச் சாக்கெல்லாந்தான்
தட்டுண்டு போச்சுதப்பா ரசங்களெல்லாம்
வான்மொழியாய்ப் பிறந்தவளோ லோகத்தாட்டு
மடக்குவழி யாயிரந்தான் சொல்லலாகும்
ஏன்மொழிவ தினிச்சரக்கைக் கொல்லுங்கொல்லு
மென்பதடி யினில்மடக்க ரசம்பொன்னுமே. ()

பொன்னடியில் வழலையிது சேர்ந்துதானல்
பூரணமுங் கூட்டியதி லேறிற்றுனற்
சொன்னபலன் தவறுண்டோ வேதைப்போக்கு
சொற்பெரிய நாதவிந்தை யறியாமூடர்
கன்னிவித்தை செய்தாலும் பூரணத்திலேறிக்
கட்டிணு லெவ்வளவுங் கட்டுமேப்பா
பின்னவத்தை யாயிருந்தா லொன்றுமில்லை
பேயாடிப் பிணமாடிப் போனதொப்பே. (62)

பிணமாடிப் போனதொக்கு மறியாமட்டை
பெலத்தபுத்திக் காரனுக்குத் தெரியுந்தெய்வம்
பணமாடிப் போனதொக்குங் குருவில்லாச்சீடன்
பழமையிதை யறிந்தவனே ஞானிவாதி
சணமாடிப் போனதொக்கு மகங்காரித்தமட்டை
சகதியிலே கல்லெறிந்த வாட்கையாகும்
மணமாடப் போனதொக்கு மிளமையிலேஞானம்
மதியமூர்தங் கொண்டவனே ஞானியாமே. (63)

காமப்பால் கானற்பால்

ஆமப்பா வழலைநிலம் புல்பற்றுது
ஆயிசென்ற விடமெல்லா மப்படியேயாகும்
வாமப்பா வழலைகண்டா லவனேவாதி
மானிலத்தில் யோகியப்பா செய்திவேறே
காமப்பால் குடித்தவெறி நிலவுப்பாகுங்
கானற்பால் குடித்தவெறி வெடியுப்புச்சூடன்
நாமப்பா யேமப்பா வென்றிருந்தால்
நாயகியை நாயகனுர் காணலாச்சே. (64)

சூடன் கட்டு.

ஆச்சப்பா யித்தனையுங் கன்னிக்கூறு
அப்பனே சூடன்மணி யாடக்கேளு
நீச்சப்பா வெள்ளமென்ற ஆகாசந்தான்
நெடியகம்பி வெடியுப்பில் பிறவியப்பா
வாச்சதொரு சூடனைத்தான் கட்டக்கேளு
வழலையுப்புச் சுண்ணமுடன் வீரச்சுண்ணம்
பாச்சப்பா கண்டர்சுண்ணம் நவச்சாரங்கூட்டிப்
பனியில்வைக்கப் பீங்கானில் நீருண்டாமே. ()

ரசச் செம்புக் களங்கு.

உண்டுகொள்ளுந் தண்ணீரில் துவைத்துபோட்டு
ஒன்பதுநாள் குத்தினபின் னூதிப்போடு
மண்டுதொரு சுண்ணும்பாய்ப் போகுமப்பா
மகத்தான சுண்ணமுடன் சவாதுகூட்டி
கொண்டுமெள்ள குடகரியி லுருக்கியாடுங்
கூட்டான கெந்திதனைத் தாக்கிப்போடு
விண்டுரெண்டுந் தான்கொடுத்த ரசத்தைத்தாக்கி
வேதையுள்ள செந்தூரக் களங்குமாமே. (66)

தூமவேதை.

களங்கமற்ற களங்கஞ்செம் பாயிரத்தில்
கட்டியிடச் செந்தூர மொருமாத்தாக்கு
வழங்குதற்குப் பொன்னாகும் நொய்யில்லாப்பொன்
மாத்துப்பத் தாயிருக்குங் களங்குவேதை
இளங்குமரிச் சாற்றாலே மடலையாட்டி
இருண்டஉமிக் காந்தலிலே புதைத்தபின்பு
பழம்புளியின் பதம்போலே யெடுத்துக்கொண்டு
பாங்காகச் செயநீரில் துவைத்துவாட்டே.(67)

வாட்டியபின் குழைந்துதான் மெழுகதாகும்
மகத்தான ரசம்வீரங் கூட்டிக்கொண்டு
ஆட்டியபின் மஞ்சாடி உண்டைசெய்து
அப்பனே ஒருஉருண்டை புகைக்கவேகம்
பாட்டமப்பா புகைப்பட்ட வீதியெல்லாம்
பசும்பொன்னாந் தூமமிது யழிக்கப்போமே

நாட்டமா யிவ்வேதை யாகுமாகும்
நாதமதைக் கண்டவனே வாதியாமே. (68)

நந்தி மார்க்கம்.

வாதமப்பா யோகமே யிருக்கவேணும்
மனோன்மணியை யென்னாளும் போற்றவேணும்
நீதமுடன் ரேசகத்தைத் தள்ளவேணும்
நிலையற்ற சிற்றின்பம் நீக்கவேணும்
சாதனையாய்ப் போசனத்தைத் தள்ளவேணும்
தன்னிலையில் மதியமுர்தங் கொள்ளவேணும்
ஆதிசிதம் பரபூசை செய்யவேணும்
அப்போது நந்திவந்து அடிசொல்வாரே. (69)

சொல்வதென்ன உப்புஅப்பு மூன்றுமப்பா
துடியான மேகத்தி னீராலாச்சு
கொல்வதொரு நீரப்பா மித்திரமாச்சு
கோவிலுக்குள் கல்லானைக் கொம்பாலாச்சு
வெல்வதற்குப் பிண்டத்தி லேறலாச்சு
வேதாந்த வெடிச்சத்தங் கண்டாலாச்சு
வல்வந்த மானபூ வாத்தாளாச்சு
மடங்காத பேரெல்லா மடிந்துபோச்சே. (70)

மடிந்தயிந்து தனையெடுத்து ஆடவேணும்
மல்லாட்டால் மாடுபோற் றிரியவேண்டுஞ்
சொடிந்துவிடுங் காச்சலப்பா அறியவேணும்
யில்லையென்றாற் சுணங்கனைப்போற் குலைக்கவே
கடிந்துவரும் சரக்கிதனைக் கட்டவேணும் [ணும்
கட்டாட்டால் வாகினிபோற் கதறவேணும்
விடிந்திரவி யுதித்தபின்பே குக்குடந்தான்
மேவியே கூவுதுபார் அறிந்துபாரே. (71)

வெண் குதிரை.

அறிந்தித்த நூல்பார்த்து வேதைபாரு
அல்லாட்டார் சித்தர்ஞானி யிடமேசேரு
செறிந்தல்லோ கல்லையிட்டுக் களிப்போலாச்சு
செயநீரின் மித்திரத்தா லித்தனையுமாச்சு

பிரிந்துஒரு சாக்குகளை யோடொட்டாமற்
பேய்போலே பிடிக்குமப்பா கட்டிக்கொண்டு
குரிந்திந்தக் கல்லானை செத்துதானுர்
கொடுமுடியாம் பாம்பதனைக் கூறுவோமே. (72)

வழலை எண்ணெ கழட்ட.

கூறுகிறேன் பாம்பதனை யெண்ணெய்வாங்கக்
கொடியதொரு கல்லானை வீரச்சுண்ணம்
தேறுகின்ற வழலைதன்னைத் தணலிலாட்டச்
செத்தங்கே யெண்ணெய்யெல்லாம் வடிந்துபோ
ஊறுகின்ற உப்புச்சுண்ணம் கண்டர்சுண்ணம் [கும்
ஓகோகோ வீரச்சுண்ணம் பழத்தாலாட்டி
வீறுபெற்ற பாம்புதனைக் கவசங்கட்டி
விளக்கிலே வாட்டயெண்ணெய் யெல்லாம்போமே.

துருசுச் சுண்ணம்.

எண்ணெய்யெல்லாம் போனபின்பு வழலைவேகம்
யிணங்காத பாம்பப்பா சரக்கெல்லாஞ்சாம்
வண்ணமுள்ள வழலையிலே வீரங்கூட்டி
வளமாகத் துருசுக்குக் கவசங்கட்டி
யெண்ணமுட னூதிவரச் சுண்ணமாகும்
யிதினாலே தாளகந்தான் சலவையாகும்
உண்ணுமப்பா பொன்னிமிளை நீறிப்போகும்
உத்தமனே நிமிளையுடன் வீரங்கூட்டே. (74)

வங்கச் சுண்ணம்,

கூட்டியே வங்கத்தி லப்பியூது
கொடியதொரு சுண்ணும்பாங் கண்டர்கப்பி
ஆட்டுவாய் கண்டருடன் வீரங்கூட்டி
அரிதேவிக் கங்கியிட்டு ஊதிப்போடு
நீட்டியதோர் தாளகத்தை கெந்தகத்துக்கப்பி
நிசமாக ஐங்குகையில் வைத்துஊது
வேட்டங்கி வேகமங்கே சுண்ணமாச்சு
வீரமிதாற் சுண்ணும்பாம் வீரங்கூட்டே. (75)

கம்பியுப்பு மெழுகு.

வீரமிட்டுத் துருசதற்குக் கவசங்கட்டி
வெந்தெடுக்கப் பச்சையில்லாச் சுண்ணமாச்சு
வீரமிட்டுக் கரியுப்புக் கங்கிபூட்டி
விளக்கிலே வாட்டையிலே மெழுகுமாகும்
காரமிட்ட அஞ்சுசுண்ணக் குகையிலூது
கடுங்காரச் சுண்ணும்பாம் வீரங்கூட்டு
பூரத்திற் பொதிந்தூதச் சுண்ணமாகும்
புகழ்பெறவே கல்நாருக் கப்பிப்போடே. (76

தாளகச் சுண்ணம்.

போட்டெடுக்கச் சுண்ணமிதில் வீரங்கூட்டி
பொன்னிமிளைக் கப்பியே யூதிப்போடு
ஆட்டெடுத்த வங்கத்துக் கப்பியூது
ஆனதொரு தளவாய்தான் சுண்ணமாகும்
நீட்டெடுத்த லோகமப்பா நீறிப்போகும்
நிசமாக நாகமது சுண்ணமாகும்
மூட்டெடுத்த சூதமப்பா சுண்ணமாகும்
மூனையான பரிமேலே யேறிச்செல்லே. (77)

செல்லப்பா வீரத்தைக் கட்டிக்கொண்டு
திடமாகத் தங்கத்துக் கங்கிபூட்டிக்
கொல்லப்பா அஞ்சுசுண்ணக் குகையிலூது
கூடகூட அய்யயோ தங்கச்சுண்ணம்
வெல்லப்பா துருசின்மேற் கவசங்கட்டி
வீரமிட்டு ஐங்கையிலூதச்சுண்ணம்
கல்லப்பா மண்ணப்பா மலைதானென்ன
காவென்ன மாவென்ன சுண்ணக்காடே. (78)

துருசுச் சுண்ணம்.

காடெல்லாந் திரிந்தலைந்து சுட்டாலென்ன
கரிசுட்டுப் போவதுவே காண்பாரப்பா
நாடெல்லா பொன்மயமே யாக்கிப்போடும்
நடமாடுந் துருசிந்தச் சுண்ணந்தன்னை

ஆடலாம் சிங்கியாய்ச் சேர்த்துப்போடு
அடங்காத குருவப்பா அருசுச்சுண்ணம்
காடெல்லாம் மலையெல்லா மரங்களெல்லாம்
கொடுமுடியும் பசும்பொன்னுங் கூட்டிப்பாரே.

முப்பூ பிறவிவிபரம்.

பாரப்பா விந்தினுட விபரங்கேளு
பாரிலே பதினறு முழத்தின்கீழே
நேரப்பா கசிந்தெடுத்து மேலேஉன்னி
நேசமாய்ப் பனிக்கால மேற்கொள்வார்கள்
ஆரப்பா யிப்பெருமை யறியப்போருர்
அடங்காத மனேன்மணித்தா யின்றநாதம்
பேரப்பா யதைக்கேளு சொல்வேன்சொல்வேன்
பேசாதே பிறரோடே யிந்தின்பூவே. (80)

இந்தென்றும் பூவென்றுங் கால்தானென்றும்
யிணையான அடியென்றும் மூலமென்றும்
சந்திரனுப் பென்றும்பேர் சுரோணிதந்தான்
தருவழலை யென்றும்பேர் பூமிநாதஞ்
சுந்தரியாள் சுட்டதென்றும் மண்தானென்றும்
துலையாத நீரளிக்கு முப்பிதென்றும்
வந்ததொரு சத்தியென்றும் கன்னியென்றும்
மனேன்மணித்தா யென்றும்பேர் கண்டுகொள்ளே.()

சிவ உப்பு.

கண்டுகொள்ளும் சிவமதனைக் காணமாட்டார்
கன்னிக்குத் தானடுக்க வாழ்வார்கேளு
பண்டுடனே யிவர்பேர்கேள் ரவிதானென்றும்
பரமென்றும் வழலையென்றும் பச்சையென்றும்
தொண்டுடையார் முடியென்றுங் கல்லுப்பென்றும்
சுத்தரவி யால்விளைந்த நிலவுப்பென்றும்
உண்டிடவே விந்தென்றும் பொருளீதென்றும்
உத்தசலக் கூத்தின்பே ராருங்காணே. (82)

காணுத பொருளொன்று சொல்லக்கேளு
கமலசத்த சாகரமு முண்டுவிட்டேன்

நீணுன தண்டாலே கீழேவிட்டேன்
நிசமாக உப்புரைத்த நீர்தானுச்சு
நானுன தண்ணீரை யிறைத்துப் பாய்ச்சி
நாட்டுள்ளோர் கொண்டல்லோ ருசியுமாச்சு
ஆனுன தண்டாலே நீருப்பாச்சு
அடங்காத சிவகெங்கை யென்றபேரே, (83)

யென்றதொரு நீராலே சரக்கெல்லாஞ்சாம்
யேகாந்த உப்பிதப்பா சத்திசித்தி
வென்றதொரு நீரப்பா வருணன்பிள்ளை
மேலெழுந்த ரவிதனக்குச் சுத்தியாச்சு
நன்ருன தண்டன்ற நீரேவாதி
ரசவாத மிதிலப்பா சூதங்கட்டுங்
குன்ருன கெந்தகத்தைக் கொல்லுங்கொல்லுங்
குடிகெடுத்த சத்தியுடன் கூடும்போதே. (84)

போதமென்ற தாகநீ ரல்லால்மற்றும்
பொரியில்லை சத்தியில்லை சிவமுமில்லை
வாதமென்று காண்பதற்கு நீரைச்சேரு
வகையுடனே கைமுறையாய்ப் பாருபாரு
நீதமென்ற நீராலே களிச்சுண்ணந்தான்
நிலைத்ததப்பா வென்ருலே வாதந்தங்குஞ்
சூதமென்ற சூதமுட னுப்புத்தொட்டுத்
தொட்டசரக் கெல்லாந்தான் செத்துப்போமே.

64, சரக்குகளுங் கட்டத்தேசிநீர்.

போமப்பா யிந்தவழி யறியவேணும்
யில்லாட்டால் புலையனைப்போல் திரியவேணும்
வேமப்பா சரக்கெல்லாம் வேகாமற்ருன்
வேறுஒரு வழியப்பா சொல்லக்கேளு
காமப்பால் மிஞ்சினதாங் கழுதைச்சென்மங்
கனதேசி நீராலே யெல்லாங்கட்டும்
யேமப்பா யிதிலென்ன சுருக்குண்டென்ருல்
யெளிதல்ல தேசியுட சாறுதானே. (86)

அமுரியின் பெருமை

தானென்ற மித்திரத்திற் பிறவிகேளு
தாரணியிற் சனங்களறு சுவையையுண்டார்
தேனென்ற தேயுவிலு லறுசுவையுமூப்பாகுஞ்
செனித்தபுளிப் பாகியது மலமாய்விட்டார்
கோனென்ற தேசியது கொண்டுதப்பா
கொடுஞ்சுருக்கு வெகுகார முப்பு நீயே
வானென்ற பூமியிலே விட்டுத்தாலுல்
மஞ்சள்வெள்ளை யுப்புமண் பொங்குங்காலே. ()

தேசிநீர் அமுரிநீர் முப்புத்தீட்சை.

பொங்குவது புளியுரைத்த உப்பல்லோகாண்
பூதலத்தில் மானிடர்தன் மலத்தின்கூறு
தங்குவது தேசியிலே சென்றதாலே
தானவனும் நீரப்பா அரியார்கள்தான்
மூங்குவது யிந்தநீர் தன்னிலேதான்
மூப்பூவைக் காய்ச்சிவிட மகத்தாமுப்பாம்
மங்குவது சரக்கெல்லாங் காய்ச்சிவாங்க
மடிந்துதப்பா தேசியுட மகத்துவநீரே. (88)

தேசிநீரின் பெருமை.

நீராலே சரக்கெல்லா முப்பதாகும்
நீராலே சரக்கெல்லா மீயமாகும்
நீராலே சரக்கெல்லாஞ் சுண்ணமாகும்
நீராலே சரக்கெல்லா மெழுகுமாகும்
நீராலே சரக்கெல்லாஞ் செந்தூரமாகும்
நீராலே சரக்கெல்லாங் களங்கமாகும்
நீராலே சரக்கெல்லாங் குளிகையாகும்
நீராலே சூதமுந்தான் கட்டிப்போமே. (89)

அட்ட சரக்குக்கும் வேதைமுறை.

கட்டிப்போம் சரக்கெல்லாங்கைமுறையாய்செய்தால்
கனவேதை சரக்குவகை சொல்லக்கேளு
அட்டமா சரக்காக விருக்குமப்பா
ஆருக்குந் தெரியாத கோசபீசந்

திட்டமுடன் சொல்லக்கேள் புனுகுபூரம்
தேன்மூலைப்பால் மித்திரமிது வீரமாகுஞ்
சட்டநற்கோ ரோசனைதான் சேர்த்துக்கொண்டு
சத்திசிவம் ரெண்டையுமொன் றாகக்கூட்டே.(90)

கூட்டுவாய் சரியிடையாய் நிறுத்துக்கொண்டு
கூருடனே ரெண்டரைநா ளரைத்துப்பின்பு
வாட்டுவாய் ரவிமுகத்தில் சிறுபயறளவாய்
வைத்திருந்து வேதையிடப் பொன்பொய்யாது
ஆட்டுவாய் வேதையிது முன்பாகந்தான்
அல்லாட்டால் மேல்நிற்கு மூட்கொள்ளாது
ஊட்டுவாய் ராசிமுறை வேதைப்போக்கு
உத்தமனே யில்லாட்டால் வெள்ளையாமே (91)

வெள்ளைப் பாசாண மெழுகு.

வெள்ளையிலே தொழில்சொல்ல வகையைக்கேளு
வீரத்தின் சுண்ணமுடன் வீரங்கூட்டி
வெள்ளைப்பா சாணத்தைக் கவசங்கட்டி
வெயிலில்வைக்கக் கட்டிப்போம் சவ்வாதுபூசி
வள்ளலே பொரிகாரச் சுண்ணமோடு
வளமான கோசபீ சத்தைக்கூட்டி
வெள்ளைப் பாசாணத்துக் கப்பியூத
விருதுமணி போலாடும் வெள்ளைதானே. (92)

தானான மணிதனையே மெழுகுபண்ணு
தான்மீறு மெழுகுதிரா வகத்தினாலே
தானான மெழுகுடனே ரசத்தையூட்டு
தனிச்சூதங் கட்டியதில் மெழுகாய்ப்போகும்
ஏனமுடன் செம்பிலே யீய்ந்தாயானால்
யிருபத்தே மாற்வயதே யென்றதாகும்
ஓனத்தின் செந்தூரஞ் செய்தாயானால்
செம்பொன்னும் முப்பத்தி ரெண்டுமாத்தே. ()

மாத்திரைத்தான் முறித்துவிட வெள்ளிநாறில்
மருந்திட்ட பொன்னையொரு மாவிலிய

மாத்திரைதான் ஒன்பதரை தப்பாதுண்மை
வளமான சூடனலித் தனையுமாச்சு
சாத்திரத்தைப் பார்த்ததிஞ லென்னவாகுந்
தகடான ராசியத்தைச் சாரவேணுங்
கோத்திரத்தை யறிந்தேதான் பெண்ணைக்கூடு
கோசபீ சத்தை நீ மறந்திடாதே. (94)

வாசி நீர் வெண்குதிரை நீர்.

மறந்திடா தேபோனல் வாதந்தங்கும்
மகத்தான வாசியி னீறதாகும்
இறந்திடவே செய்யுமப்பா தேசிச்சாற்றில்
யெடுத்தசரக் கெல்லாந்தான் மாண்டுபோகும்
பிறந்திடவே யாகாது பிறந்தாயானல்
பெருமையுடன் ஞானவித்தை கற்கவேணுங்
கலந்திடுநல் மேனியனுய் வச்சிரகாயன்
சாபத்தைக் கொள்வதற்கு கலியோட்டானே.()

புத்தி.

கலியொட்டா தென்பதென்ன மாய்கைபாசக்
கன்னியர்கள் மாய்கையிலே யகப்பட்டேதான்
வளியொட்டான் கற்பத்தை நினைக்கொட்டாது
மாண்பர்செய்யுந் தொழிலதனல் கெட்டுப்போனர்
நிலைகெட்டால் தவசிருப்பே னென்பான்மட்டை
நீனிலத்தில் பிட்சகனய்த் திரிவான்பின்பு
தலையெடுக்க வழிசொன்னல் பிழைக்கவேணும்
தழலிலே வேகாமற் சின்னப்பேரே. (96)

பேருகொண்ட மானிடனே ஞானயோகி
இல்லாட்டால் பேதலித்த சுத்தமாடு
மாருகொண்ட வண்டருக்குக் கற்பமேது
மடையன் சண்டாளனுக்கு ஆகாதப்பா
வீருகொண்டு திரிந்தாக்கால் ஞானமில்லை
வேரற்ற மரம்போலாம் சடலம்போக்கும்
நாறுகின்ற சடலமிது வாசங்கொண்டால்
நமனில்லை சாகாம லிருக்கலாமே. (97)

கற்மு'பண்ண அறிவு

இருக்கவென்று மனமுறைத்தா யாறற்சொல்வேன்
றுன்பாவி கோபத்தைத் தள்ளிப்போடு
கருக்குள்ள கற்பத்தைப் பின்புகொள்ளு
காசினியில் நூற்றெட்டுக் கற்பமாகும்
பெருக்கமுட னெந்தெந்தக் கற்பமானாலும்
பேசாது மவுனமுற்றுக் கொள்ளவேணும்
உருக்கமுடன் பெண்டாசை பிள்ளையாசை
யொட்டினாற் கற்பமெல்லா மோடிப்போமே. ()

ஓடாமல் கோபத்தை நிறுத்தவேணும்
மூண்மையுடன் கற்பத்தைக் கொள்ளவேணும்
வாடாத சிந்தையதா யிருக்கவேணும்
மாடம்விட்டுத் துறவுதனில் போகவேணும்
நாடுவிட்டுக் காடுதனில் போனாலுந்தான்
நல்லபுத்தி தனைப்படைத்து இருக்கவேணுந்
தேடுகின்ற மனைவிசெய்த தேட்டமாகிச்
சிந்தையிலே நினைவுகொண்டாற் சிதறிப்போமே.

சிதறுவதே யல்லாமல் ஞானப்பேய்தான்
செடலமுடல் கொண்டேதா னலைக்கும்பாரு
மதறு காமியம்பிள்ளை சுத்தம் நின்று
மருந்துகொண்டால் மாடமென்ன மலைதானென்ன
குதறுபட்ட நினைவாகில் ராசிவேதை
கூடாமல் போனதொக்கும் ஞானக்கற்பம்
பதமென்ன பேச்சென்ன வாதமென்ன
பரியாச மோகெடுவாய் பாழிற்போமே. (100)

வல்லாரைக் கற்பம்.

பாழிலே போகாமற் மனத்தைத் தேர்ந்து
பராபரவஸ்த் துவைநினைந்து தியானஞ்செய்து
நாளிலே யோகசா தனையைச் செய்து
நலியாமல் கற்பத்தைக் கொள்வாயப்பா
வாழிலோர் ரவிவாரம் பூசங்கூடில்
வல்லாரை நிழலுலர்த்திச் சூரணஞ்செய்

கோளில்லா நாள்பார்த்துக் காடி தன்னில்
குளைத்து நீ வெருகடியாய் விழுங்குவாயே. (101)

விழுங்குவாய் வருடமொன்று கொண்டாயானால்
விள்ளுவே னிதன்பலன்கள் நரைகளில்லை
ஒழுங்கில்லாத் திரையுமில்லை வலுமையோடும்
உடலிலே யழகிட்ட காயமாகும்
நலுங்கிட்ட தேகமப்பா பிலத்துப்போகும்
நாட்டரச னென்று பேர்கொள்ளாதே
யெழுங்புதற்கு யோகமப்பா யிருக்கவேணும்
இசையான சாரணையைச் செய்துகூடே. (102)

கருநெல்லிக் கற்பம்.

கூடுகின்ற கற்பமொன்று சொல்லக்கேளு
கோலமிடும் வாணதீர்த் தங்கழித்து
ஓடுகின்ற ஆாமப்பா மேற்கேசென்றால்
உயர்ந்ததொரு பாறையுண்டுதெற்கேபார்த்தால்
நாடுநீ யதின்கிட்ட நடந்து சென்றால்
நல்லகரு நெல்லியொன்று அதின்மேல் நிற்கும்
பாடுகின்ற பாட்டுக்குத் தோணுதப்பா
பரிவாகப் பாறையின்மேல் யேறிச்செல்லே. ()

செல்லப்பா சிவத்தியானம் பண்ணிக்கொண்டு
திடமாக மூலமந்திரஞ் செபித்துமேதான்
வல்லமையாய்ப் பாறையிலோர் குகையுமுண்டு
வளமாக அதிலிருந்து மண்டலந் தான்பாரு
நல்லதொரு ரிசியங்கே யெப்போது மிருப்பார்
நட்டாத்தில் தோணுமப்பா தெரிசனையுமுண்டாம்
சொல்லுவார் சைவாகமத்தின் போக்குந்
துரைகாண மந்திரமொன்றுஞ் சொல்வார்தாமே.

ஆமப்பா அவர்சொன்ன மந்திரத்தை
ஆயிரத்தெண் ணுருவாகில் செய்திகேளு
ஆமப்பா ஈசான மூலைதன்னில்
வளமான கோவிலொன்று தோணுமப்பா

ஆமப்பா ரிஷிகோடி யாலயத்துள்
எருகிருப்பார் தங்களடி பணிந்துநோக்கு
ஆமப்பா வாவென்றே தானழைப்பார்
அவரிலொரு பெரியோர்தா னாசிப்பாரே. (105)

ஆசிப்பார் சிந்தையெல்லாஞ் சோதித்தேதான்
அருமையுள்ள கருநெல்லிக் கனிமூன்றேதான்
நேசித்தே கைகொடுப்பார் வாங்கிக்கொண்டு
நேசமுட னென்முன்னே போகச் சொல்வார்
போசித்தார் கனியெனக்கொன் றீய்ந்தபின்பு
புகழான சீசனென்று கனிகொள்ளென்பேன்
வாசித்தா வெனவென்று பேருமிட்டு
மகத்தான கனிதந்தோர் முன்புசெல்லே. (106)

செல்லென்று ஒருகனியைக் கொடுக்கச் சொல்வேன்
சீசனா யவர்க்கங்கே யிருக்கச் சொல்வேன்
வல்லமையாய்ச் சகலமெல்லாம் கற்றுக்கொள்வாய்
வாழ்நாளுஞ் சாகாம விருக்கச்சொல்வேன்
யில்லறத்தின் வாட்கையென்ன கலிகாலத்தில்
இருப்பதென்ன துறவியிலே யிருக்கவேணும்
மல்லென்ற சனங்களெல்லா மலமாயெண்ணி
மலையேறி வந்து விட்டால் கலிவாராதே. (107)

அறிவு கூறல்.

வாராத வருமைகள்தான் வந்துதானல்
வழிக்கிவழி யாகவைத்துத் தள்ளவேணும்
தீராத தீவினையோ வந்துதானற்
சிவன்மேலே பாரமாய்ப் போடவேணும்
போராடிச் சத்துருக்கள் வந்துதானற்
பூதலத்தில் குரங்கதுபோல் திரியவேணுஞ்
சாராத கலிவந்து மூண்டுதானல்
தள்ளிவிட்டு மலைமீதி லேறுவாயே. (108)

ஏறினல் மனக்குரங்கு யேருட்டாது
யிருதயத்தைப் பத்திமுத்தி யாகச்செய்வாய்

தேருகின்ற சடலமல்லோ யோகமப்பா
செத்திறந்து போவதுவே சடலவாட்கை
வீறுகொண்டு வாழ்வதற்குக் கற்பங்கண்டு
மேனிவச்சிர காயமதா யிருக்கவேணும்
கூறுகின்ற பாட்டெல்லா மிருனூறுக்குள்
கூறினேன் விரியாம லறிந்துபாரே. (109)

போதிகையில் சித்தர்கள்.

பாரப்பா பிர்மனிட்ட லபியைத்தட்டிப்
பாழிலே தள்ளிவிடுங் கர்மக்கூறு
ஆரப்பா யிதையறிவார் கற்பமேதென்பார்
அசடனப்பா உரைக்கின்ற வார்த்தையாகுஞ்
சீரப்பா துறவியிலே சென்றால்யோகஞ்
சித்திக்கும் பொதிகையப்பா ரிஷிகள்கோடி
பாரப்பா யிக்கால மடுத்தோர்கள்தான்
பதினாயிரம் வரைக்கும் குகையுண்டாமே. (110)

ஞானக் கூறு.

உண்டான செய்தியப்பா சொன்னேன்கேளு
உண்மையிது பேரின்பங் கற்கவேணும்
உண்டான குளவியது புழுவைக்கவ்வி
உபதேசங் கற்றல்லோ வேறேருபம்
கொண்டேதா னிருக்குமது ஞானக்கூறு
கூறியுந்தா னறியாட்டா லென்செய்வேனான்
சண்டாள னானுக்கால் நூலேதென்பான்
சாத்திரமே தென்பான்காண் மடையன்றானே.

சோதி விருட்சக் கற்பம்.

தானவனா யிருப்பதற்குக் கற்பங்கேளு
சதுரகிரி பருவதத்தி னடுக்கச் செல்லு
போனபின்பு மாலூற்றின் தென்மேற்காய்ப்போ
போனபின்பு வடநோக்கி மலைமேலேறு
ஆனதொரு சாமம்வழி நடந்துபோனால்
அப்பனே தலைமையைக் காணலாகும்
யேனமூட னதிலிருந்து மேற்கேகாதம்
யேகினா லங்கேயொரு சோலைதானே. (112)

ஆமப்பா ரிஷிகோடி யாலயத்துள்
எருகிருப்பார் தங்களடி பணிந்துநோக்கு
ஆமப்பா வாவென்றே தானழைப்பார்
அவரிலொரு பெரியோர்தா னாசிப்பாரே. (105)

ஆசிப்பார் சிந்தையெல்லாஞ் சோதித்தேதான்
அருமையுள்ள கருநெல்லிக் கனிமூன்றேதான்
நேசித்தே கைகொடுப்பார் வாங்கிக்கொண்டு
நேசமுட னென்முன்னே போகச் சொல்வார்
போசித்தார் கனியெனக்கொன் றீய்ந்தபின்பு
புகழான சீசனென்று கனிகொள்ளென்பேன்
வாசித்தா வெனவென்று பேருமிட்டு
மகத்தான் கனிதந்தோர் மூன்புசெல்லே. (106)

செல்லென்று ஒருகனியைக் கொடுக்கச் சொல்வேன்
சீசனா யவர்க்கங்கே யிருக்கச் சொல்வேன்
வல்லமையாய்ச் சகலமெல்லாம் கற்றுக்கொள்வாய்
வாழ்நாளுஞ் சாகாம லிருக்கச்சொல்வேன்
யில்லறத்தின் வாட்கையென்ன கலிகாலத்தில்
இருப்பதென்ன துறவியிலே யிருக்கவேணும்
மல்லென்ற சனங்களெல்லா மலமாயெண்ணி
மலையேறி வந்து விட்டால் கலிவாராதே. (107)

அறிவு கூறல்.

வாராத வருமைகள்தான் வந்துதானால்
வழிக்கிவழி யாகவைத்துத் தள்ளவேணும்
தீராத தீவினையோ வந்துதானாற்
சிவன்மேலே பாரமாய்ப் போடவேணும்
போராடிச் சத்துருக்கள் வந்துதானாற்
பூதலத்தில் குரங்கதுபோல் திரியவேணுஞ்
சாராத கலிவந்து மூண்டுதானால்
தள்ளிவிட்டு மலைமீதி லேறுவாயே. (108)

ஏறினால் மனக்குரங்கு யேமுட்டாது
யிருதயத்தைப் பத்திமுத்தி யாகச்செய்வாய்

தேருகின்ற சடலமல்லோ யோகமப்பா
செத்திறந்து போவதுவே சடலவாட்கை
வீறுகொண்டு வாழ்வதற்குக் கற்பங்கண்டு
மேனிவச்சிர காயமதா யிருக்கவேணும்
கூறுகின்ற பாட்டெல்லா மிருனூறுக்குள்
கூறினேன் விரியாம லறிந்துபாரே. (109)

போதிகையில் சித்தர்கள்.

பாரப்பா பிர்மனிட்ட லபியைத்தட்டிப்
பாழிலே தள்ளிவிடுங் கர்மக்கூறு
ஆரப்பா யிதையறிவார் கற்பமேதென்பார்
அசடனப்பா உரைக்கின்ற வார்த்தையாகுஞ்
சீரப்பா துறவியிலே சென்றால்யோகஞ்
சித்திக்கும் பொதிகையப்பா ரிஷிகள்கோடி
பாரப்பா யிக்கால மடுத்தோர்கள்தான்
பதினாயிரம் வரைக்கும் குகையுண்டாமே. (110)

ஞானக் கூறு.

உண்டான செய்தியப்பா சொன்னேன்கேளு
உண்மையிது பேரின்பங் கற்கவேணும்
உண்டான குளவியது புழுவைக்கவ்வி
உபதேசங் கற்றல்லோ வேறேருபம்
கொண்டேதா னிருக்குமது ஞானக்கூறு
கூறியுந்தா னறியாட்டா லென்செய்வேனான்
சண்டாள னுனுக்கால் நூலேதென்பான்
சாத்திரமே தென்பான்காண் மடையன்றானே.

சோதி விருட்சக் கற்பம்.

தானவனு யிருப்பதற்குக் கற்பங்கேளு
சதுரகிரி பருவதத்தி னடுக்கச் செல்லு
போனபின்பு மாவூற்றின் தென்மேற்காய்ப்போ
போனபின்பு வடநோக்கி மலைமேலேறு
ஆனதொரு சாமம்வழி நடந்துபோனால்
அப்பனே தலைமையைக் காணலாகும்
யேனமுட னதிலிருந்து மேற்கேகாதம்
யேகினா லங்கேயொரு சோலைதானே. (112)

ஆமப்பா ரிஷிகோடி யாலயத்துள்
ளருகிருப்பார் தங்களடி பணிந்துநோக்கு
ஆமப்பா வாவென்றே தானழைப்பார்
அவரிலொரு பெரியோர்தா னாசிப்பாரே. (105)

ஆசிப்பார் சிந்தையெல்லாஞ் சோதித்தேதான்
அருமையுள்ள கருநெல்லிக் கனிமூன்றேதான்
நேசித்தே கைகொடுப்பார் வாங்கிக்கொண்டு
நேசமுட னென்முன்னே போகச் சொல்வா
போசித்தார் கனியெனக்கொன் றீய்ந்தபின்பு
புகழான சீசனென்று கனிகொள்ளென்பேன்
வாசித்தா வெனவென்று பேருமிட்டு
மகத்தான கனிதந்தோர் மூன்புசெல்லே. (10

செல்லென்று ஒருகனியைக் கொடுக்கச் சொல்வேன்
சீசனு யவர்க்கங்கே யிருக்கச் சொல்வேன்
வல்லமையாய்ச் சகலமெல்லாம் கற்றுக்கொள்வாய்
வாழ்நாளுஞ் சாகாம லிருக்கச்சொல்வேன்
யில்லறத்தின் வாட்கையென்ன கலிகாலத்தில்
இருப்பதென்ன துறவியிலே யிருக்கவேணும்
மல்லென்ற சனங்களெல்லா மலமாயெண்ணி
மலையேறி வந்து விட்டால் கலிவாராதே. (107)

அறிவு கூறல்.

வாராத வருமைகள்தான் வந்துதானல்
வழிக்கிவழி யாகவைத்துத் தள்ளவேணும்
தீராத தீவினையோ வந்துதானற்
சிவன்மேலே பாரமாய்ப் போடவேணும்
போராடிச் சத்துருக்கள் வந்துதானற்
பூதலத்தில் குரங்கதுபோல் திரியவேணுஞ்
சாராத கலிவந்து மூண்டுதானல்
தள்ளிவிட்டு மலைமீதி லேறுவாயே. (108)

ஏறினல் மனக்குரங்கு யேமுட்டாது
யிருதயத்தைப் பத்திமுத்தி யாகச்செய்வாய்

தேருகின்ற சடலமல்லோ யோகமப்பா
செத்திறந்து போவதுவே சடலவாட்கை
வீறுகொண்டு வாழ்வதற்குக் கற்பங்கண்டு
மேனிவச்சிர காயமதா யிருக்கவேணும்
கூறுகின்ற பாட்டெல்லா மிருநூறுக்குள்
கூறினேன் விரியாம லறிந்துபாரே. (109)

போதிகையில் சித்தர்கள்.

பாரப்பா பிர்மனிட்ட லபியைத்தட்டிப்
பாழிலே தள்ளிவிடுங் கர்மக்கூறு
ஆரப்பா யிதையறிவார் கற்பமேதென்பார்
அசடனப்பா உரைக்கின்ற வார்த்தையாகுஞ்
சீரப்பா துறவியிலே சென்றால்யோகஞ்
சித்திக்கும் பொதிகையப்பா ரிஷிகள்கோடி
பாரப்பா யிக்கால மடுத்தோர்கள்தான்
பதினாயிரம் வரைக்கும் தொகையுண்டாமே. (110)

ஞானக் கூறு.

உண்டான செய்தியப்பா சொன்னேன்கேளு
உண்மையிது பேரின்பங் கற்கவேணும்
உண்டான குளவியது புழுவைக்கவ்வி
உபதேசங் கற்றல்லோ வேறேரூபம்
கொண்டேதா னிருக்குமது ஞானக்கூறு
கூறியுந்தா னறியாட்டா லென்செய்வேனான்
சண்டாள னுக்கால் நூலேதென்பான்
சாத்திரமே தென்பான்காண் மடையன்றானே.

சோதி விருட்சக் கற்பம்.

தானவனு யிருப்பதற்குக் கற்பங்கேளு
சதுரகிரி பருவதத்தி னடுக்கச் செல்லு
போனபின்பு மாவூற்றின் தென்மேற்காய்ப்போ
போனபின்பு வடநோக்கி மலைமேலேறு
ஆனதொரு சாமம்வழி நடந்துபோனால்
அப்பனே தலைமையைக் காணலாகும்
யேனமுட னதிலிருந்து மேற்கேகாதம்
யேகினு லங்கேயொரு சோலைதானே. (112)

சோலைவிட்டு வடநோக்கிக் கீழேசென்றால்
சுத்தமாங் கணைதைபெற்ற குகைதானுண்டு
வாலொழுங்கிற் செல்கையிலே குகைக்குப்பின்பாய்
வடமேற்கு மூலையில்தா னின்றகாட்சி
ஆலமரம் போலிருக்குங் கண்ணிற்காணூர்
அம்மரத்தைக் காண்பதற்குச் செய்திகேளு
மூலமந்திரம் நூற்றெட்டுச் செபித்தாயாகில்
முழுநோக்கந் தோணுமந்தச் சோதிதானே.()

சோதியுட விருட்சமப்பா கண்டுங்காணூர்
சொற்பெரிய ரிஷிகட்கெல்லாம் தோணலாகும்
நீதியுட னம்மரத்தின் பால்மூன்றேநாள்
நிசமாகக் கொண்டுவரப் பால்பழமுமாகும்
ஆதியிந்தக் கற்பத்தால் கோடிசித்தர்
அடிமையாய் அம்மரத்தில் வாழும்பெண்கள்
வாதியென்றும் யோகியென்றும் மாலையிடுவார்
வாசமுடன் தெய்வேந்திரன் வரிசைதானே.()

நந்தி உபதேசிக்க.

வரிசைபெற்று மேயிருப்பார் கோடிகாலம்
மாதருடன் கூடியவர் வாழ்வார்காணும்
உரிசிபெற்ற மூப்பூவைக் காணவேணும்
உண்மையுடன் கல்லானை யறியவேணும்
பரிசணத்தில் வேதையிட்டுப் பார்க்கவேணும்
பரமசிவ பூசைநன்றாய்ச் செய்யவேணும்
தெரிசனத்தில் நந்திவந்து உபதேசிப்பார்
திடமான வாதமெல்லாந் தெரிவிப்பாரே. (115)

மூப்பு தேசிநீர் தீட்சை.

பாரப்பா தேசிநீர் படியொன்றில்தான்
பாங்கான மூப்பூவைக் கறைத்துவாங்கிச்
சேரப்பா கெந்திபலம் ரெண்டுக்குத்தான்
திடமான சீனங்கால் மூப்பூவுங்கால்

ஊரப்பா கனலிலே குறுகக்காய்ச்சி
உதயாதி கண்டபின்பு உப்பதாகும்
பாரப்பா உப்பதனைப் பூரணத்தில்
பாங்காகக் கலக்கியே ரவியில்போடே. (116)

கெந்தக உப்பு.

போடப்பா கெந்தகந்தான் நல்லஉப்பு
புகழாக ஊதவே காரச்சுண்ணம்
நாடப்பா சாரஞ்சேர் தண்ணீராகும்
நாகமுடன் ரசங்கட்டும் வழலைதொட்டு
ஆடப்பா கெந்தியுமே கட்டிப்போகும்
அடங்காத தேசியின்மித் திரத்தின்கூறு
தேடப்பா சூட்டைத்தான் பலந்தானென்று
செப்பமுள்ள வழலையுப்புப் பலங்கால்கூட்டே.()

அமுரி தீட்சை.

கூட்டுவாய் மித்திரத்தி னிரெண்டாகக்
குழப்பியே தெளிவுதனைக் கால்படிதான்வற்ற
ஆட்டுவாய் ரவிமுகத்தி லுப்பதாகும்
அப்பனே சிறுநீரா லரைத்துவாங்கு
மூட்டுவாய் ரவியிலப்பா உப்பாய்ப்போச்சு
முக்கியமுடன் தீவாட்டச் சுண்ணமாகும்
நாட்டமாய்ப் பின்னுங்கேள் விந்தால்கட்டும்
நல்லமதி யுப்பெனவே சொல்லலாச்சே. (118)

வழலை விபரம்.

ஆச்சப்பா வழலையுடன் வீரஞ்சீனம்
அப்பனே புழுகிட்டுக் கல்லுப்புக்கப்பி
பாச்சப்பா ஊதிடவே சுண்ணமாகும்
பாங்கான வழலையுட செய்திகேளு
நீச்சப்பா பூமியுட நாதந்தன்னை
நிலைத்ததொரு செய்தியாய்ச் சொல்லக்கேளு
வாச்சதொரு வழலையப்பா காரசாரம்
மகத்தாக முன்பொருக்கால் சொன்னேன்காணே

நந்தீசர் முறை.

காணப்பா நான்செய்த கட்டுமுறையப்பா
கருணையுடன் நந்திசொன்ன மொழியேதென்றால்
ஊணப்பா யேகவஸ்து பூமிநாதம்
உத்தமனே யிந்தாலே கட்டிப்போகும்
வீணப்பா செய்திசொல்லப் பூரணந்தான்
வீதிகொண்ட பீங்கானில் நீரதாச்சு
தோணப்பா யிக்குருவே மூதற்குருவாஞ்சொன்னேன்
சொல்முறையைத் தப்பாதே வாதம்பாரே.(120)

வாதமிது உள்ளபடி மற்றச்செய்தி
மகத்தான குருவப்பா முடிக்கவேணும்
போதமிது வழலையிது சுத்தமேனி
போக்கிதையே யறிந்தாக்கா லவனேவாதி
நீதமிது வஸ்துவித்தைக் காடுமாடும்
நிசமான வழலையப்பா பூமிதன்னில்
நாதமிது வொன்றுகுங் காரசாரம்
நந்திபரன் வழலையப்பா யிந்துப்போக்கே.

தச தீட்சை.

போக்கோடே பூரணத்தைப் பாருபாரு
புகழான பூருவமே நிசமேதீட்சை
வாக்கோடே யேறுதற்கு நீறுண்டாகும்
மகத்தான வழலையப்பா ஆகாசந்தான்
தாக்கோடே யெச்சரக்குஞ் சுண்ணமாகுந்
தன்மையுடன் மதியமூர்த்தம் பார்க்கவேயுண்
ணுக்கோடே மேல்வாசல் தட்டுந்தட்டும்
நலமான வழலையைத்தான் வாங்குவாயே(122)

வாங்குவாய் வழலையைத்தான் வீரஞ்சேர்த்து
வழமான சுக்கிலமுங் கூடவிட்டுப்
பாங்கான அமுரியுப்புக் கூடப்போட்டுப்
பரையான ரத்தமிட்டுப் பெண்ணமுரிகூட்டி
சாங்கமாய்க் கற்பூரஞ் சினஞ்சேர்த்துச்
சாத்துவாய் துருசுதான் சுண்ணமாகும்

ஓங்கிநின்ற ரசகெந்திப் பாசாணந்தான்
ஓகோகோ பட்டுவிடுங் கட்டுத்தானே. (123)

தானென்ற தேசியிலே ரசத்தைக்கட்டச்
சந்திரனுப் பானசுண்ணக் கெந்திச்சுண்ணம்
தேனென்ற சுண்ணமப்பா சரியிடையாய்ச்சேர்த்துத்
திறமாக நாலிலொன்று சாரங்கூட்டி
வானென்ற வழலையிட்டு வீரங்கூட்டி
வளமாகத் துருசுக்கு அங்கியிட்டு
தானென்ற ரவிக்குள்ளே சுண்ணமாகுஞ்
சாரஞ்சேர் சரியாகச் செலமதாமே. (124)

நாயுருவி கல்லுப்பு தீட்சை.

ஆமப்பா ரசந்தனைக்குச் சுருக்குத்தாக்கு
ஆனையப்பா பட்டுவிடுங் கெந்திசேரு
போமப்பா செந்தூரம் பஞ்சலோகம்
போடப்பா களஞ்சொன்றி லோர்மஞ்சாடி
நாமப்பா கண்கண்டோம் பத்துவர்ணம்
நாயுருவி நீற்றுள்ளே கல்லுப்பிட்டு
வேமப்பா கல்லுப்புச் சுத்தியாச்சு
வீரமுடன் வழலையைத்தான் கூட்டிக்கொள்ளே. ()

கொள்ளப்பா சீனமுடன் புழுகிட்டேதான்
கூறியதோர் கல்லுப்புக் கவசம்பண்ணி
மெள்ளப்பா சுண்ணமது துருசுக்கப்பி
விதமான ரவிக்குள்ளே போடச்சுண்ணங்
கள்ளப்பா செயநீராஞ் சாரஞ்சேரு
கந்தமுட னரிதார மிந்த நீரால்
துள்ளியப்பா கெந்தியுடன் சாதிலிங்கம்
துறையான வீரமிட்டு ஆட்டுவாயே. (126)

யோகம்.

ஆட்டுவாய் குகையதனில் சவ்வாதுகூட்டு
அப்பனே மணியாகும் களங்கமாகும்
பூட்டுவாய் நவலோகம் நூற்றிலொன்று
போடவே பதிமூன்று மாத்துமாகும்

நந்தீசர் முறை.

காணப்பா நான்செய்த கட்டுமுறையப்பா
கருணையுடன் நந்திசொன்ன மொழியேதென்றால்
ஊணப்பா யேகவஸ்து பூமிநாதம்
உத்தமனே யிந்தாலே கட்டிப்போகும்
வீணப்பா செய்திசொல்லப் பூரணந்தான்
வீதிகொண்ட பீங்கானில் நீரதாச்சு
தோணப்பா யிக்குருவே மூதற்குருவாஞ்சொன்னேன்
சொல்முறையைத் தப்பாதே வாதம்பாரே.(120)

வாதமிது உள்ளபடி மற்றச்செய்தி
மகத்தான குருவப்பா முடிக்கவேணும்
போதமிது வழலையிது சுத்தமேனி
போக்கிதையே யறிந்தாக்கா லவனேவாதி
நீதமிது வஸ்துவித்தைக் காடுமாடும்
நிசமான வழலையப்பா பூமிதன்னில்
நாதமிது வொன்றுருகுங் காரசாரம்
நந்திபரன் வழலையப்பா யிந்துப்போக்கே. ()

தச தீட்சை.

போக்கோடே பூரணத்தைப் பாருபாரு
புகழான பூருவமே நிசமே தீட்சை
வாக்கோடே யேறுதற்கு நீறுண்டாகும்
மகத்தான வழலையப்பா ஆகாசந்தான்
தாக்கோடே யெச்சரக்குஞ் சுண்ணமாகுந்
தன்மையுடன் மதியமூர்த்தம் பார்க்கவேயுண்
ணக்கோடே மேல்வாசல் தட்டுந்தட்டும்
நலமான வழலையைத்தான் வாங்குவாயே(122)

வாங்குவாய் வழலையைத்தான் வீரஞ்சேர்த்து
வழமான சுக்கிலமுஞ் கூடவிட்டுப்
பாங்கான அமுரியுப்புக் கூடப்போட்டும்
பழையான ரத்தமிட்டுப் பெண்ணமுரிகூட்டி
சாங்கமாய்க் கற்பூரஞ் சீனஞ்சேர்த்துச்
சாத்துவாய் துருசுதான் சுண்ணமாகும்

ஓங்கிநின்ற ரசகெந்திப் பாசாணந்தான்
ஓகோகோ பட்டுவிடுங் கட்டுத்தானே. (123)

தானென்ற தேசியிலே ரசத்தைக்கட்டச்
சந்திரனுப் பானசுண்ணக் கெந்திச்சுண்ணம்
தேனென்ற சுண்ணமப்பா சரியிடையாய்ச்சேர்த்துத்
திறமாக நாலிலொன்று சாரங்கூட்டி
வானென்ற வழலையிட்டு வீரங்கூட்டி
வளமாகத் துருசுக்கு அங்கியிட்டு
தானென்ற ரவிக்குள்ளே சுண்ணமாகுஞ்
சாரஞ்சேர் சரியாகச் செலமதாமே. (124)

நாயுருவி கல்லுப்பு தீட்சை.

ஆமப்பா ரசந்தனக்குச் சுருக்குத்தாக்கு
ஆனையப்பா பட்டுவிடுங் கெந்திசேரு
போமப்பா செந்தூரம் பஞ்சலோகம்
போடப்பா களஞ்சொன்றி லோர்மஞ்சாடி
நாமப்பா கண்கண்டோம் பத்துவர்ணம்
நாயுருவி நீற்றுள்ளே கல்லுப்பிட்டு
வேமப்பா கல்லுப்புச் சுத்தியாச்சு
வீரமுடன் வழலைவைத்தான் கூட்டிக்கொள்ளே. ()

கொள்ளப்பா சீனமுடன் புழுகிட்டேதான்
கூறியதோர் கல்லுப்புக் கவசம்பண்ணி
மெள்ளப்பா சுண்ணமது அருசுக்கப்பி
விதமான ரவிக்குள்ளே போடச்சுண்ணங்
கள்ளப்பா செயநீராஞ் சாரஞ்சேரு
கந்தமுட னரிதார மிந்த நீரால்
துள்ளியப்பா கெந்தியுடன் சாதிலிங்கம்
துறையான வீரமிட்டு ஆட்டுவாயே. (126)

யோகம்.

ஆட்டுவாய் குகையதனில் சவ்வாதுகூட்டு
அப்பனே மணியாகும் களங்கமாகும்
பூட்டுவாய் நவலோகம் நூற்றிலொன்று
போடவே பதிமூன்று மாத்துமாகும்

மாட்டுவாய் வழலையினாற் காணலாகும்
மதியமூர்தம் கொண்டவனே ஞானியாகும்
மூட்டுவா யக்கினியைத் திங்களாலே
மூன்றுகச் சுழிமுனையில் தாக்குதாக்கே. (127)

தாக்கிருகண் குட்டாலே கடுப்புத்தோன்றுஞ்
சலியாதே வாய்வுதனை யமர்த்திவாங்கு
வாக்கிலே நங்கென்று எழும்பிச்சென்றால்
வளமான சுழிமுனைதான் நன்றாய்த்தோணும்
போக்கிலே விட்டுவிடு கடினமாகா
பொறியாக நாள்வாசி யேறலாகும்
மூக்கிலே கேதுவுடன் ராகுங்கூட்டி
முனைநோக்கக் குண்டலியை மூட்டலாமே.(128)

தீட்சைவிதி பத்தும் அறிய.

மூட்டுதற்குச் சமாதியிலே யிருக்கவேணும்
மூதண்டக் குளிகைதனைச் செய்யவேணும்
கூட்டுதற்குக் கற்பத்தைக் கொள்ளவேணும்
குறியான சாரணையைச் செய்யவேணும்
நாட்டமாய்த் தீட்சைவிதி பத்தும்நன்றாய்
நலியாமல் கற்றுணர்ந்து யிருக்கவேணும்
மேட்டிமையாய்த் திரிந்தாக்கால் யோகமாமோ
விளங்குதற்குக் கற்பத்தைக் கொள்ளுவாயே.()

கோங்கின் பூ கற்பம்.

கொள்ளப்பா கோங்கினுட பூவைத்தானே
கொண்டுவந்து நிழலுலர்த்திச் சூரணஞ்செய்
கொள்ளப்பா அனுப்பானம் தேன் பால்நெய்யும்
கொள்ளவே சர்க்கரையுங் கூட்டிக்கொண்டு
கொள்ளப்பா மண்டலந்தான் மூன்றுங்கொண்டால்
குன்றெடுத்த மாயோன்றன் வயதுண்டாகும்
கொள்ளப்பா பாலுடனே சோறுமாகுங்
கூட்டியொன்றைக் கொண்டக்கால் கொள்ளைநோவே.

சவுக்காரச் சுண்ணம்

நோவாகும் பேய்கொள்வான் யெல்லாம் போகும்
நோம்பாக யிருந்தாக்கால் கற்பந்தங்கும்
பாவாகுஞ் சுயமெல்லாஞ் சொல்லலாகும்
பகலவன்போற் காந்தியுண்டாம் பசுமையாவான்
நாவாலே பலனப்பா சொல்லப்போகா
ராசேந்திரன் கன்னிதனை மேவுவான்காண்
பூவான வழலையிலே சவுக்காரந்தான்
போக்கோடே விட்டிடவே யெண்ணெய்போமே.

எண்ணெய் கழட்டும் விபரம்.

எண்ணெய்தான் வாங்குதற்குச் சொல்லக்கேளு
இளங்குமரிச் சிறுநீரில் கல்லுச்சுண்ணம்
வண்ணமுள்ள பூத்தனையுஞ் சரியாய்க்கூட்டி
வளமாக நீற்றியே வாங்குநீரை
வெண்மையுள்ள காரைதனை உரைத்துப்போட
மீறியதோ ரெண்ணெய்கக்கும் வெயிலில்வைப்பாய்
தன்மையுடன் பின்பொருக்கா லிப்படியே நீற்றச்
சவுக்காரத் தெண்ணெயெல்லாங் கக்குந்தானே.()

குருக்கு வழி.

கக்கினதோர் வழலையைத்தான் சொல்லக்கேளு
கல்சுண்ண நீற்றினத்தில் நாதங்கூட்டி
முக்கியமாய்க் குருவண்டுங் கூட்டிக்கொண்டு
மூலத்தால் வழலைதனைக் கவசங்கட்டி
மெய்க்கவே தீயாட்டச் சுண்ணமாகும்
விருதான சுண்ணமது குருக்குவழியப்பா
முக்கியமா யிக்குருவைச் செய்தாயாகில்
மோகிக்கச் சாரமொன்று கூட்டியாட்டே. (133)

கல்லுப்பு சுண்ணச் செயநீர்.

ஆட்டியே பீங்கானில் வழித்து வைக்க
அப்பனே செலமாகுஞ் செலத்தினுள்ளே
போட்டிடுவாய் கல்லுப்புத் தன்னையப்பா
புகழாக ஊதிடவே சுண்ணமாகும்

பூட்டுதற்குத் துருசதுமே லேறித்தென்றால்
போதமுள்ள சூதனைத்தான் கொன்றுபோடும்
ஆட்டுவாய் மணிபோலே ஆடுமப்பா
அரகரா உப்பாலே சொல்லலாச்சே. (134)

ஆச்சப்பா யித்தனையு மிந்திறுலே
அரகரா ரவிகட்டிப் போனதாலே
வாச்சப்பா வழலையென்று கண்டோங்கண்டோம்
வளமான அண்டத்தி னூறல்வாங்க
வீச்சப்பா வாதமடை திறந்து போச்சு
வெளியோடு சிந்தைவைத்துத் திடமிதாச்சு
போச்சப்பா வாதமெல்லா மடங்கிப் போச்சு
பெண்ணுடம்பே யுப்பான அடியைப்பாரே. ()

அடியிலே பொலபொலென் றுதிருமப்பா
அப்புளியைக் கண்டவுடன் மேகத்தாலே
துடியிலே வழலையென்பா ரிதிவேதுண்டு
தொக்கிநின்ற வித்தையெல்லாம் பூரத்தலே
வெடியிலே தான்பிறந்த நீலனப்பா
மேகம்விட்ட யிந்தாலே ரவியைக்கட்டிச்
சொடியவே பச்சையப்பா சூடன்சேரு
சொக்கிறது பூரணத்தால் விறைத்துப்போமே.

புத்தி.

விறைத்துதப்பா சனங்கள்கற்பம் தின்னுமற்றுன்
வெந்ததொரு பிடிசாம்ப லாகப்போனார்
உறைத்துதப்பா சித்தரெல்லாங் கோடாகோடி
உண்மையுடன் கற்பத்தைக் கொண்டதாலே
மறைத்துதப்பா பெண்பிள்ளை பிறவிதந்தை
மாதாவின் சுற்றமொடு பாசங்கொண்டு
குறைத்துதப்பா சீவனெல்லா மறலிக்காகக்
கொடுங்கனலில் நெய்தானே யிட்டவாறே. (137)

சூத குளிகை.

இட்டமுட னிருப்பதற்குக் கற்பங்கேளு
இசையான கிரிகூடம் மலையின்மேலே

திட்டமுடன் பொங்குநதி தீர்த்தமுண்டு
தீர்த்தத்துக் கப்புறம்ஓர் காதஞ்சென்றால்
வட்டமொரு மலையுண்டு காலால்தேய்த்தால்
மாற்றுள்ள செம்பாகத்தோணுமப்பா!
கட்டியதோ ரம்மலையில் சூதந்தன்னைக்
கைகொண்டு தேய்க்கவே கட்டிப்போமே. (138)

திரிகூடமலை உரோம வேங்கை மரக் கற்பம்

கட்டியதோர் சூதத்தைக் குளிகையாக்கிக்
கதுப்புள்ளாய் ஒதுக்கிவைத்தாற் கனகதேகம்
திட்டமுடன் ரிசிகட்கெல்லாம் கண்ணிற்றோன்றுந்
திறமான கற்பமெல்லாங் கண்ணிற் றோன்றும்
விட்டிடமும் தொட்டிடமுந் தெரியாமற்றான்
வேதைகளுந் தோணுமப்பா விரைந்துகேளு
ஒட்டியதோர் பாறையின்கீழ் ரோமவேங்கை
உண்டதிலே யதினுடைய பாலைவாங்கே. (139)

பாலையொரு பீங்கானில் வாங்கிக்கொண்டு
பரிவான கெந்தகத்தை யாட்டிக்கொண்டு
சீலையிலே ஊட்டியே தீக்கொழுத்தத்
தீப்பிடித்துத் தைலமதாம் பின்புகேளு
வாலையாம் பாறையிலே தேய்த்த ரசங்கூட்டி
மாட்டியறை நாகமுந்தான் கூட்டிக்கொண்டு
நீலக்கொடி வேலியது யடுக்கவுண்டும்
நிசமாக அச்சாறு விட்டுஆட்டே. (140)

ஆட்டியே மெழுகாக்கிப் புடத்தில்போடு
அப்பனே செந்தூரமாகும்பாரு
நாட்டமாய் நித்தமொரு மாவேகொள்ளு
நன்றாக மண்டலத்திலேறிக்கொண்டு
மூட்டவே பலனப்பா சொல்லப்போகா
மூதண்டக் குளிகையுமாங் கெவுனசித்தி
வாட்டமில்லா தட்டசித்தி யோகசித்தி
மாணமில்லை யொருநாளும் வாலையாமே. (141)

சமாதி தங்க தச தீட்சை.

வாலையுட பூசைசெய்தால் வாதந்தங்கும்
மனமான சாரணைக்குக் கெவுனந்தங்கும்
காலையெனும் வாலையினால் யோகந்தங்கும்
கட்டான தீட்சையினால் சமாதிதங்கும்
நாலுபத்து முக்கோண சக்கரமேதங்கும்
நமனில்லை சாகாத வாழ்வேதங்கும்
ஆலமுண்ட கண்டருட ளுயிசென்று
அடுத்தடுத்துத் திசதீட்சை அறிந்துபாரே. ()

இந்நூல் பெருமை.

அறிந்திந்த நூல்பார்த்து வேதைபாரு
அறிந்திந்த நூல்பார்த்துத் தீட்சைபண்ணு
அறிந்திந்த நூல்பார்த்துக் குளிகைசேரு
அறிந்திந்த நூல்பார்த்து வழலைவாங்கு
அறிந்திந்த நூல்பார்த்து அடியைப்பாரு
அறிந்திந்த நூல்பார்த்து சுண்ணம்பண்ணு
அறிந்திந்த நூல்பார்த்து செயநீர்பண்ணு
அறிந்திந்த நூல்பார்த்து வாதம்பாரே. (143)

வெடியுப்புச் செயநீர்.

பாரப்பா சூடனென்று சீனமொன்று
பரிவான புளியெட்டு வெடியுப்பெட்டு
பாரப்பா முப்பூவின் குருத்தானென்று
பண்பான கல்லுப்பு ரெண்டுங்கூட்டி
சீரப்பா யிந்துவொன்றுங் கூடக்கூட்டித்
திறமாகச் சம்பளத்தா லாட்டிக்கொண்டு
தீரப்பா தீக்கொழுத்த யெரிந்து யெல்லாந்
திடமான சுண்ணம்பாஞ் சாரஞ்சேரே. (144)

கடுங்காரம் ஏற்ற.

சேரப்பா யெட்டிலொன்றாய்ச் சாரஞ்சேர்த்துத்
திறமாகப் பீங்கானி லிறுக்கத் தண்ணீர்
பூரமுடன் வீரமப்பா பணவிடையாய்ப் போட்டு
போக்கான துறையெல்லா மிதிலே யாடு

காரமப்பா கட்டிப்போஞ் சுண்ணமாகுங்
கடுங்கார மேறுதற்கு வகையைக்கேளு
பூரஉப்பு வழலையிட்டு மத்தித்தேதான்
புகழ்பெறவே காரத்துக் கப்பிக்கொண்டே.(145)

திருகு கள்ளி உப்புச் சுண்ணம்,

கொண்டபின்பு ரவிக்குள்ளாய் மயங்கப்போடு
கொக்கிறகு போலவே காரச்சுண்ணங்
கண்டதொரு காரத்தில் காரமேறிக்
கல்லுப்பைக் கட்டிமணி யாகவாட்டும்
பண்டையிலே திரிகோணத் தைலமூட்டு
பஞ்சலோ கங்களெல்லாம் பழுக்கும் பத்தாய்
விண்டதொரு செய்திதன்னைக் கேளுகேளு
மிதமான திருகுகள்ளிப் பொருக்கைச் சுட்டே.

சுட்டதொரு சாம்பலைத்தான் தேசிச்சாற்றில்
சொல்லுகிறேன் சாம்பலொன்று நீர்தானலு
கட்டிவிடு தியெரிக்கச் சாம்பலப்பா
கறைத்தநீர் தெளிவெல்லாம் மூப்பதாச்சு
இட்டமூட னிந்தஉப்பில் வீரஞ்சீனந்
திறமான புழுகுடனே வழலைகூட்டி
மட்டடங்காப் புடமாகச் சுண்ணமாச்சு
வாய்த்ததொரு அம்பரத்தில் பாலில்போடே.()

லிங்கமெழுகு வேதை.

போடப்பா செலமாகு மிந்த நீரில்
புதுமையுடன் வீரமும் பணவிடையாய்ப்போட்டு
ஆடப்பா லிங்கத்தைத் துவைத்துத் தீயில்
ஆட்டவே மெழுகாகும் ரவிமதியாம் ரெண்டில்
ஆடப்பா ஐம்பதுக்கு ஒன்றுபோடு
அப்பனே யேழரைமாத் தாகுஞ்சொன்னேன்
நீடப்பா கைகண்ட வித்தையிதுபாரு
நிசமாக யின்னமொரு வழிசொல்வேனே.(148)

அன்னபேதி உப்புச் சுண்ணம்.

வழியான செய்தியப்பா அன்னபேதி
வகையான பழச்சாற்றி லரைத்துக்கொண்டு

தெளிவான அச்சாற்றில் கலக்கியேதான்
சிறக்கவே காய்ச்சிடவே யுப்பதாகும்
ஒளியன்ன பேதியுப்புத் தேசிச்சாற்றில்
உத்தமனே முன்சொன்ன படிவீதம்போடு
வெளிப்பிறவே கலக்கியபின் தெளிந்தபின்பு
விருதான முப்பூவால் காய்ச்சு காய்ச்சே. (149)

துருசுச் சுண்ணம்.

காச்சியே குறுக்கிஉப்பை யெடுத்துக்கொண்டு
கல்லுப்பு வீரமொடு சரியாய்ச் சேர்த்து
வாச்சுதே வழலையினு லரைத்துக்கொண்டு
வண்மையுள்ள பேதியுப்பு புடத்திற் சுண்ணம்
பேச்சினியே திருக்குதப்பா வீரஞ்சீனம்
பேரான புழுகிட்டுத் துருசுக்கப்பி
ஆச்சுதே ரவிக்குள்ளே பொதிந்துஊத
ஆனதொரு பச்சையப்பா சுண்ணமாகும் (150)

துருசுச் செய நீர்.

சுண்ணமப்பா வெள்ளெருக்கம் பாலிற்போடச்
சொன்னவாய் முந்துமுன்னே தண்ணீராகும்
யெண்ணமுள்ள நீரப்பா வீரஞ்சேர்த்து
யிணையான துருசுக்குப் பூசிக்கொண்டு
வண்ணமுள்ள ரவிக்குள்ளே மயங்கப் போட்டு
வாச்சுதப்பா துருசிந்தச் சுண்ணந்தன்னை
உண்ணுதற்கு அண்டத்தில் வெண்கருத்தானப்பா
ஓகோகோ நிற்சிலமாய்ப் பொன்னதாச்சே. ( )

கெந்தகக் கட்டு வேதை.

ஆச்சிந்த அண்டத்தின் நீருக்குள்ளே
அப்பனே வீரமிட்டுச் சொல்லக்கேளு
வாச்சிந்த மஞ்சள் நீர்க் கருவை வாங்கி
வளமாக ஓட்டில்வைத்துச் சுருக்குத்தாக்கு
ஏச்சிந்தக் கருவென்ன கட்டியேதா
னிறுகினதோர் மெழுகாச்சு கெந்தகத்தை
மூச்செழும்ப ஒட்டாமல் கவசங்கட்டி
மூனைத்தீயில் வாட்டிடவே கட்டிப்போச்சே. ( )

தங்கக்கட்டு வேதை.

கட்டினதோர் கெந்தகத்தை வெள்ளிநூற்றில்
கருவொருமா விடவேதான் கனகமாச்சு
மட்டில்லாச் செய்தியப்பா நாகஞ்சேர்த்தால்
மண்ணுமில்லை கல்லுமில்லை செந்தூரத்தில்
வெட்டினியாய்த் தங்கமென்ற நீற்றுவேதை
விள்ளுகிறேன் கட்டியதோர் கெந்திதன்னைத்
திட்டமுடன் குகைதனிலே உருக்கும்போது
திறமாக வீரத்தைச் சிறிதுதாக்கே. (153)

தாக்கப்பா லிங்கமொடு சீனம்பூரந்
தாளகஞ் சூதமொடு சரியிடையாய்க்கொண்டு
தாக்கப்பா மணியினுள்ளே ஆடுமாடுஞ்
சாதகமா யிந்திடைக்குத் தங்கங்கூட்டித்
தாக்கப்பா ஆட்டயிலே சவ்வாதை யீய்ந்தால்
தளதளப்பாய் மணிபோலே கண்விட்டாடுந்
தாக்கப்பா யிந்தினுள்ளே கோசபீசந்
தடையில்லை களங்கமற்ற களங்கந்தானே (154)

தானென்ற களங்கமப்பா நூற்றுக்கொன்று
தாக்கினல் முப்பத்தி ரெண்டுமாத்துத்
தானென்ற களங்கமா யிரத்துக்கொன்று
தாக்கவே பதினெட்டு மாத்தேயாகுந்
தானென்ற களங்கந்தான் பதினுயிரத்தில்
தாக்கொன்று பின்புதான் மாற்றுப்பத்தாம்
தானென்ற களங்கத்தைச் செய்யவேணுஞ்
சாற்றினேன் தெளிவாகச் சார்ந்துகேளே. (155)

கறந்தைக் கற்பம்.

கேளப்பா யிதுக்கெல்லாம் வழலைவேணும்
யில்லாட்டாற் மூதலெல்லாங் கெடுதியாகும்
வேளப்பா கற்பத்தைக் கொள்ளவேணும்
யில்லாட்டாற் மேனிவெந்து சாம்பலாகுந்
தோளப்பா சொல்லுகிறேன் கற்பமொன்று
துணிவான கறந்தையது சமூலம்வாங்கி

நாளப்பா நிழலுலர்த்திச் சூரணஞ்செய்
நயமாகச் சீனியுடன் கொண்டுபாரே. (156)

பாரப்பா வருடமொன் று கொண்டாயானால்
பரிபால ஞகுமப்பா உடலமெல்லாம்
பாரப்பா தங்கமிட்ட காயமாகும்
பளிச்சென்று செங்கழுநீர் வாசம்வீசும்
பாரப்பா சரஸ்பதியே நிர்த்தஞ்செய்வாள்
பண்பான கருவெல்லாந் தோய்ந்துபோகும்
பாரப்பா சித்தியெல்லாந் தங்கிவாழ்வான்
பரையீன்ற நாதவித்தை பகருவாளே. (157)

பூரணத்தின் பெருமை.

பகருவாள் வாலையுட செய்தி கேளு
பண்பான ரகசியமாம் பூரணந்தான்
பகருவாள் தனித்தபச்சை ரவியைத்தானே
பாரடா யிந்தாலே கட்டிப்போச்சு
பகருவதே நீராளுல் வழலையாச்சு
பலவகைக் கருவெல்லாம் பாழாய்ப்போகும்
பகருவதேன் களிச்சுண்ணங் கோடாகோடி
பார்ப்பதற்கு மூப்பூவே சுண்ணமாமே. (158

ஆமப்பா சுண்ணத்தால் சுண்ணங்கோடி
அப்பனே மெழுகோடு களங்கங்கோடி
சேமப்பா செந்தூரங் கோடாகோடி
சேர்ந்துநின்று கட்டினமூ மூருக்கினமுங்கோடி
போமப்பா வேதையிலே கோடாகோடி
புகழ்பெற்ற குளிகையோ கோடாகோடி
நாயப்பா கண்கண்டோம் நாட்டிலுள்ளோர்
நன்மையுடன் வாதவித்தை நயந்துகாணே. ()

கோடிக்கள்ளி உப்புச் சுண்ணம்.

காணப்பா கொடிக்கள்ளிச் சருகுதன்னைக்
கனல்மூட்டிச் சாம்பலா யெடுத்துக்கொண்டு
தோணப்பா தேசியுட நீரிலேதான்
செல்லுகின்ற சாம்பலெல்லாங் கரைத்துவைத்து

தாமப்பா தெளிவாக யிறுத்துக்கொண்டு
தான்கனத்த பாண்டமதிற் றனேகாய்ச்சி
யேமப்பா சவ்வீரம் பூரந்தாலும்
யிணையான சீனமுடன் புழுகுசேரே. (160)

துருசுக் குரு செயநீர்.

சேரப்பா வழலையுட னரைத்துக்கொண்டு
திறமான சரக்கெல்லா முப்பிடையாய்க்கொண்டு
சேரபபா ரவிக்குள்ளே மயங்கப்போடு
திறமான கொடிக்கள்ளி யுப்புச்சுண்ணம்
சேரபபா அம்பரத்தின் பாலிற்போடச்
செனத்திலே நீராச்சு யென்சொல்வேனான்
சேரப்பா வீரமதி லூரமும்பாடு
செப்பமுள்ள நீராச்சு பச்சைக்குக்கூத்தே (161)

துருசுக்குச் சுண்ணம்

குத்துவாய் பதினோர்நாள் குத்திப்பின்பு
கூறுவேன் வீரமொடு சீனக்காரம்
உத்ததொரு புழுகுடனே கூட்டிக்கொண்டு
உற்பனத்தின் நீராலே யாட்டிக்கொண்டு
சித்திபெறத் துருசுக்குக் கவசங்கட்டித்
திறமான ரவிக்குள்ளே மயங்கப்போடு
முத்திபெற்ற சுண்ணமிது வீரஞ்சேர்த்து
முக்கியமாய் வைத்துவித்தைக் காட்டுவாரே.( )

ஆட்டுவார் நாதாக்கள் சித்தரெல்லாம்
அப்பனே கல்லானைக் குள்ளேபோடு
வாட்டுவா ரவிதொட்டு யென்னசொல்வேன்
மக்களே காயசித்தி மகிழ்ந்துபண்ணு
தேட்டுவார் நீராச்சு சமூலமெல்லாஞ்
செப்பரிது செப்பரிது சொன்னேன்கேளு
ஓட்டுவா ரிந்தமட்டு மப்பாகேளு
உத்தமனே வழலைவிட்டா லெல்லாம்போச்சே.( )

போச்சப்பா சரக்கெல்லா மூருண்டுதானே
போனதினால் வழலைபட்டு வேதையாச்சு

பாச்சப்பா துருசிலே சுண்ணமாச்சு
பாங்கானசீதேவி செத்துப்போனால்
வாச்சப்பா வங்கமது சுண்ணமாச்சு
வளமானபொன்னிமிளை நீறிப்போச்சு
ஓச்சப்பா சாரமிதில் நீராய்ப்போச்சு
ஓகோகோ சாரத்தால் துருசிநீரே. (164)

கோடிக்கள்ளி செயநீர் பெருமை.

நீராலே செந்தூரங் கோடாகோடி
நிலைத்துநின்ற ரசகுளிகை கோடாகோடி
நீராலே கட்டினமூங் கோடா கோடி
நிசமாக ஆடுதற்குக் களங்கங்கோடி
நீராலே செயநீருங் கோடாகோடி
நிர்மலத்தின் சாரணைதான் கோடாகோடி
நீராலே சுண்ணமப்பா கோடாகோடி
நிலைத்ததொரு கொடிக்கள்ளி உப்புப்போக்கே.

தேற்றுவிதையால் தெளிவு.

போக்கான செய்தியொன்று சொல்லக்கேளு
புதுமையுள்ள யெந்தவகை நீரானாலும்
வாக்கான தேத்தான்வித்தை அரைத்துப்போட்டு
மைந்தனே தெளிவுகொண்டு பார்த்தால்சுத்தி
தாக்காக மூறிந்துதப்பா நீருதானே
சாத்திரத்தை பார்த்தாக்கா லறியவேணுஞ்
சாக்கான குருசெய்தா லொன்றுமில்லை
தன்மையுடன் வழலைதனை யறிந்திடாயே. (166)

வீரம் சீவனம் செய்ய.

அறிவான செய்தியப்பா சொல்லக்கேளு
ஆனைக்கல் சுண்ணமது சோலிமெத்த
அறிவாகப் பச்சைரவி யிந்தால்கட்டி
அடைவாகச் சாக்கெல்லாஞ் சுண்ணம்பண்ணு
அறிவுடனே வீரமிட்டு வேதைபாரு
அப்பனே யேழெட்டு மாத்துக்காணும்

அறிவாக யிதைத்தொட்டுச் சீவனமேசெய்து
அளவற்ற வித்தையெல்லாம் பிறகுபாரே.(167)

துருசுச் சுண்ணம்.

பாரப்பா வழலையிலே வீரங்கூட்டிப்
பச்சைதனக் கப்பியே ரவியில்போடு
நேரப்பா துருசுதான் சுண்ணமாகும்
நேராக வீரமிட்டுப் புழுகுசீனஞ்
சாரப்பா தாளகத்தி லப்பியூதச்
சலவைபோ லாச்சுதப்பா அரிதாரந்தான்
வாரப்பா தாரமிது மஞ்சாடிகொடுக்க
வாதித்தன் மதிமூவேழிற் கொடுக்கச்சொல்லே.

தாரம் சீவனம் செய்ய.

செல்லுமே கடைக்கெல்லா மெட்டேகாலாணித்
திறமாகச் செய்துகொண்டு சொல்லக்கேளு
வல்லதொரு சீவனத்தைப் பண்ணிக்கொண்டு
மகத்தான வழியெல்லாம் பிறகுபாரு
நல்லதொரு கோசத்தை மறந்திடாதே
நன்றான பீசத்தை யிகழ்ந்திடாதே
சொல்லுகின்ற வகைக்கெல்லாம் குருவைச்சொல்வேன்
துடியான களங்கத்துக் காதியென்றே. (169)

புத்தி.

ஆதியாந் தாளகத்தை விட்டாலில்லை
அப்பனே செந்தூரப் போக்குக்கெல்லாம்
நீதியென்ற வீரத்தை விட்டால்போச்சு
நீரான மெழுகுவகைச் செய்திக்கெல்லாம்
ஆதியென்ற செயநீரை விட்டால்போச்சு
மகத்தான குளிகையுட சாரணைக்கெல்லாம்
போதியென்ற ரசம்விட்டால் போச்சுபோச்சு
போக்கான சுண்ணத்தின் வகையைக்கேளே.()

உருக்கினத்துக் காதி,

கேளப்பா சீனமொடு வீரம்பூரங்
கெடியதோர் பச்சையொடு புழுகுங்கூட்டி

பாச்சப்பா துருசிலே சுண்ணமாச்சு
பாங்கான சிதேவி செத்துப்போனல்
வாச்சப்பா வங்கமது சுண்ணமாச்சு
வளமான பொன்னிமிளை நீறிப்போச்சு
ஓச்சப்பா சாரமிதில் நீராய்ப்போச்சு
ஓகோகோ சாரத்தால் துருசிநீரே. (164)

கோடிக்கள்ளி செயநீர் பெருமை.

நீராலே செந்தூரங் கோடாகோடி
நிலைத்துநின்ற ரசகுளிகை கோடாகோடி
நீராலே கட்டினமுங் கோடா கோடி
நிசமாக ஆடுதற்குக் களங்கங்கோடி
நீராலே செயநீருங் கோடாகோடி
நிர்மலத்தின் சாரணைதான் கோடாகோடி
நீராலே சுண்ணமப்பா கோடாகோடி
நிலைத்ததொரு கொடிக்கள்ளி உப்புப்போக்கே.

தேற்றுவிதையால் தெளிவு.

போக்கான செய்தியொன்று சொல்லக்கேளு
புதுமையுள்ள யெந்தவகை நீரானலும்
வாக்கான தேத்தான்வித்தை அரைத்துப்போட்டு
மைந்தனே தெளிவுகொண்டு பார்த்தால்சுத்தி
தாக்காக மறிந்துதப்பா நீருதானே
சாத்திரத்தை பார்த்தாக்கா லறியவேணுஞ்
சாக்கான குருசெய்தா லொன்றுமில்லை
தன்மையுடன் வழலைதனை யறிந்திடாயே. (166)

வீரம் சீவனம் செய்ய.

அறிவான செய்தியப்பா சொல்லக்கேளு
ஆனைக்கல் சுண்ணமது சோலிமெத்த
அறிவாகப் பச்சைரவி யிந்தால்கட்டி
அடைவாகச் சாக்கெல்லாஞ் சுண்ணம்பண்ணு
அறிவுடனே வீரமிட்டு வேதைபாரு
அப்பனே யேழெட்டு மாத்துக்காணும்

அறிவாக யிதைத்தொட்டுச் சீவனமேசெய்து
அளவற்ற வித்தையெல்லாம் பிறகுபாரே.(167)

துருசுச் சுண்ணம்.

பாரப்பா வழலையிலே வீரங்கூட்டிப்
பச்சைதனக் கப்பியே ரவியில்போடு
நேரப்பா துருசுதான் சுண்ணமாகும்
நேராக வீரமிட்டுப் புழுகுசீனஞ்
சாரப்பா தாளகத்தி லப்பியூதச்
சலவைபோ லாச்சுதப்பா அரிதாரந்தான்
வாரப்பா தாரமிது மஞ்சாடிகொடுக்க
வாதித்தன் மதிமூவேழிற் கொடுக்கச்சொல்லே.

தாரம் சீவனம் செய்ய.

செல்லுமே கடைக்கெல்லா மெட்டேகாலாணித்
திறமாகச் செய்துகொண்டு சொல்லக்கேளு
வல்லதொரு சீவனத்தைப் பண்ணிக்கொண்டு
மகத்தான வழியெல்லாம் பிறகுபாரு
நல்லதொரு கோசத்தை மறந்திடாதே
நன்றான பீசத்தை யிகழ்ந்திடாதே
சொல்லுகின்ற வகைக்கெல்லாம் குருவைச்சொல்வேன்
துடியான களங்கத்துக் காதியென்றே. (169)

புத்தி.

ஆதியாந் தாளகத்தை விட்டாலில்லை
அப்பனே செந்தூரப் போக்குக்கெல்லாம்
நீதியென்ற வீரத்தை விட்டால்போச்சு
நீரான மெழுகுவகைச் செய்திக்கெல்லாம்
ஆதியென்ற செயநீரை விட்டால்போச்சு
மகத்தான குளிகையுட சாரணைக்கெல்லாம்
போதியென்ற ரசம்விட்டால் போச்சுபோச்சு
போக்கான சுண்ணத்தின் வகையைக்கேளே.()

உருக்கினத்துக் காதி,

கேளப்பா சீனமொடு வீரம்பூரங்
கெடியதோர் பச்சையொடு புழுகுங்கூட்டி

தோளப்பா சுண்ணமிதா லொன்றுமில்லை
சொல்லுகின்ற உருக்கினத்துக் காதியென்ன
கோளப்பா கொவ்வைநிகற் சவ்வாதாகுங்
கூட்டுகின்ற வெண்காரப் பலகைவேணும்
நாளப்பா புடத்துக்கு உப்பேவேணும்
நாட்டுகின்ற தொழிலெல்லா மிதினால்காணே.

காணப்பா புடத்துக்கு வழலைவேணும்
கட்டுகின்ற களங்குக்கு வழலைவேணும்
காணப்பா குளிகைக்கும் வழலைவேணும்
கடியதொரு சாரணைக்கும் வழலைவேணும்
காணப்பா உருக்கினத்தில் வழலைவேணும்
காரணச்செந் தூரத்துக்கு வழலைவேணும்
காணப்பா விந்தாலே ரவியைக்கட்டிக்
காண்பதுவே வழலையென்ற சொல்லுத்தானே. (

பசியாதிருக்க நாயுருவி.

சொல்லக்கேள் சமாதியிலே யிருப்பேனென்று
துடியாக மண்டலந்தான் குகைக்குள்ளாக
வெல்லுதற்கு நாயுருவி விரையைவாங்கி
விழுதுபட வேயறைத்துப் பாலிற்கொள்வான்
வல்லொத்த அக்கினியைத் தம்பித்தேதான்
வருடம்ஒன்று தானிருப்பான் பசியில்லாமல்
நல்லதொரு வெந்நீரிற் கொண்டானாகில்
நந்தியிலே தீவிரமாய்ப் பசியுண்டாகும். (173)

பசியாதிருக்கக் கட்டுக்கோடி.

உண்டானசெய்தியிது வெருகடியாய்க்கொள்வான்
உலகத்தி லுள்ளோரை மயக்கியேதான்
தெண்டனிடச் சமாதியிலே யிருப்பேனென்பான்
செப்பமுடன் கட்டினுட கொடிசமூலந்
தண்டின்ற வெல்லத்தில் கொண்டானாகில்
தன்மையுடன் சிறுநீர்தான் கட்டிப்போகும்
மண்டலந்தான் பசியாமல் கொள்வான்பின்பு
வயறுபசி யெடுப்பதற்குப் பொடிதின்பானே. (174)

மந்தக் குளிகை.

தின்றேதான் பின்புமொரு தீர்க்கஞ்செய்வான்
செயலான சூதமொடு காரங்கெந்தி
நன்றான வங்கமொடு விரம்பூரம்
நாவியுடன் கல்லுப்புக் கூட்டிக்கொண்டு
குன்றாமல் சரியிடையாய் யெடுத்துக்கொண்டு
கோடியிலே உற்றசிறு நீராலாட்டிச்
சென்றாடக் குக்கிடத்தின் வெண்கருவாலாட்டிச்
செயமாகக் குளிகைசெய்து ரவியில்போடே.(175)

போட்டதொரு வில்லைதன்னை யுந்தியிலேவைத்துப்
புடையிலே சமாதிருப்பான் பசியில்லாமல்
நாட்டமுடன் சோறுண்டாப் போலேதோணும்
நன்மையுடன் மேனியெல்லாம் பழுப்பேதோன்றி
வாட்டங்க ளில்லாமற் தோணுமிந்த
மந்தத்தின் குளிகைசெய்வான் மனிதர்மெய்க்கத்
தாட்டிகமாய்ச் சமாதுவிட்டு வந்தால்பின்பு
சனங்களெல்லாம் அதிசயமாய்த் தொழுவார்பாரே.

புத்தி.

பாரப்பா யிப்படியே மனிதர்மெய்க்கப்
பரமனைப்போல் பால்பழங்கள் கொள்வேனென்
நேரப்பா பாலுடனே சோறுமுண்பான் [பான்
நெறியில்லா தவன்வயிற்றுப் பிழைப்பிதப்பா
சேரப்பா யோகத்தைச் செய்யவேணுந்
திடங்கொண்டு மலைமீதி லேறவேணுங்
காரப்பா குகைகளிலே யிருக்கவேணும்
கற்பத்தார் சமாதிகொண்டு யிருக்கலாமே.(177)

கற்ப முறை.

இருக்கவென்று மனமுறைத்தா லமுர்தங்கொள்ளு
இன்பமுடன் கடுக்காயின் கற்பங்கொள்ளு
பெருக்கவொரு கற்பமப்பா வீழிதின்று
பேதமில்லாத் தைலங்கள் வைத்துக்கொள்ளு

பருக்கவொரு கையானைக் கொண்டுபாரு
பண்யாகச் சூதகற்பற் கொண்டுயேறு
திருக்கறவே கொண்டாக்கால் ஞானசித்தி
திட்டமிதில் வகாரசித்தி மூன்றுங்காணே. (178)

கல்லுப்புச் சுத்தி.

காணப்பா சுரோணிதத்தை அஞ்சுகாய்ச்சல்
கண்டபின்பு பாறையுப்பை யேழுகாய்ச்சல்
பூணப்பா கல்லுப்புச் சூதம்வெள்ளை
பூமியுட நாதத்தில் பூரணமேயாகும்
ஆணப்பா சுக்கிலத்தி னுப்புத்தன்னை
அப்பிலே கரைத்துவைத்துத் தெளிவைவாங்கிப்
பேணப்பா கரியோட்டில் விட்டுத்தானே
பெலமாக ரவிமுகத்தில் வைத்திடாயே. (179)

முப்பூ முடிக்கக் களிச் சுண்ணம்.

வைத்திருக்க ஓட்டுப்பாஞ் சிவன்தானப்பா
மகத்தான முப்பூவும் முடிப்பேன் கேளு
சுத்தமாங் கல்லுப்பு ஆணும்பெண்ணுந்
தோணவே சொல்லுகிறேன் கேளுகேளு
செத்துவிட்ட சுண்ணமப்பா சரியிடையாய்க்கொண்டு
தேசியுட நீராலே களிச்சுண்ணந்தான்
வத்தவே காய்ச்சினபின் னெடுத்துக்கொள்ள
வளமான களிச்சுண்ண மாச்சுபாரே. (180)

ஆச்சப்பா களிச்சுண்ணம் பன்னிரெண்டு
அழகான சீனமொடு வீரம்பூரம்
வாச்சுதப்பா புழுகுடனே ஆட்டுதற்கு
வாய்ப்பான செயநீரா லாட்டுஆட்டு
போச்சுதப்பா சுண்ணும்பாய்ப் போச்சு போச்சு
பொறியான சரக்கெல்லாம் வகைவீதமொன்ற
போச்சுதப்பா களிச்சுண்ணம் பெரியோர்சொல்லா
பேய்ப்பாட்டாய்ப் பாடினார் நூலெல்லாமே. (

நூலெல்லாம் சொல்வாகள் களிச்சுண்ணம்பை
நுட்பமாய்ப் பாடிவிட்டேன் வழலைக்கூட்டு
பாலென்ன வெள்ளையப்பா ரவியில்போட்டால்
பச்சையுடன் சுட்டதுவும் பாறையுப்புங்
காலென்ன சுண்ணத்தின் கருவைக்கேளு
காரணமாய் வந்துதப்பா பூரணந்தான்
வாலிபத்தின் வெடியுப்பு நீரினாலே
வழலையென்ற நாமமெல்லாந் துலங்கிப்போச்சே.

துலங்காமல் பாடினு ருலகத்தோர்கள்
சுட்டலைந்து கெடுகிறதாய்ச் சலித்துப்போனீர்
மலங்காதே யென்னுடைய நூலைப்பாரு
மகத்தான வழலையுட கருவைச் சொல்வேன்
கலங்காதே யிந்தாலே ரவியைக்கட்டக்
காரமென்ற சாரவித்தை யாகுமாகும்
விலங்காதே பதினாறு சரக்கைப்போடு
வீரத்தை மாட்டுதற்குச் சொல்லக்கேளே. (183)

சொல்லுகிறேன் லோகமெல்லாம் பொன்னாய்ப்போகும்
சொன்னாக்கால் சித்தரெல்லாமிவ்வளவோயென்பார்
வல்லுகின்ற வழலையப்பா காரசாரம்
மகத்தான யிந்தாலே கட்டிப்போகும்
வெல்லுதற்குச் சுண்ணமெல்லா மிதிலேயாச்சு
வெடியுப்பே செயநீரின் மூலமாகும்
கொல்லுகின்ற சரக்கெல்லா மிதிலேமாட்டக்
குலத்திலே அவுசாரி கற்புப்போக்கே. (184)

முப்பூ கற்பச் சுண்ணம்.

கற்பென்று சொல்லுதற்குப் பூமிநாதங்
கடைகெட்ட சென்மமப்பா கழுதையாகும்
வெற்பென்று சொல்வதற்குச் சுக்கிலந்தான்
வீரிதப்பா சமுத்திரத்தின் பாறையுப்பு
நற்பென்று பிடித்தார்கள் ரவியும்மிந்தும்
நாடெல்லாம் மேயுதற்குப் பாத்தையானாள்

மற்பிடிக்கப் போகாது வழலையப்பா
வாருகொண்ட அண்டத்தின் கருவைக்கேளே. ()

அண்டக்கரு

கேளப்பா குக்குடத்தின் முட்டை நூறு
கெடியான சிவசத்தி வெவ்வேருய்வைத்து
நாளப்பா தோடதனை ஊசிநீரில்
நாட்டமுடன் சுத்திசெய்து காய்ச்சிக்கொண்டு
வாளப்பா மூப்பூவின் பலந்தான்ஒன்றில்
வாழ்சீனக் காரமொன்று வீரமொன்று
நாளப்பா செயநீரா லாட்டிக்கொண்டு
நன்ருக வில்லைசெய்து உலரவையே. (186)

வையப்பா கெசபுடத்தில் சுண்ணமாச்சு
வளமான கருரெண்டுஞ் சொல்லக்கேளு
செய்யப்பா ரவிமுகத்தி லிந்தால்கட்டச்
செயநீராம் பூரணத்தைப் பாருபாரு
அய்யப்பா யிதிலேதான் கல்லுப்பிட்டு
அப்பனே ஊதுநன்ருய்ச் சுண்ணமாகும்
பொய்யப்பா வென்றிருக்க வேண்டாஞ்சொன்னேன்
புகழாகக் கரிக்குள்ளா யாடும்பாரே. (187)

ஆடுகின்ற மணியாலே செயநீர்பண்ணு
அடங்கிநின்று உருகையிலே களங்கம்பண்ணு
தேடுகின்ற சூதமதைச் செந்தூரம்பண்ணு
சிறப்பாகச் சுண்ணத்தின் குருவைப்பண்ணு
நாடுகின்ற உருக்கினயோ கோடாகோடி
நயமாகச் சூதத்தைக் கட்டிக்கொண்டு
சாடுகின்ற திரிகோணத் தைலமூட்டச்
சாத்தடா நவலோகம் வேதையாமே. (188)

நவலோகம் கிட்டமாக.

வேதையுடன் கருவெல்லாஞ் சொல்லிவிட்டேன்
விருப்பமுள்ள காயசித்தி சொல்லிவிட்டேன்
பாதையென்ற பாதையெல்லா முப்பேபாதை
பரமான உப்பறிந்தா லவனேவாதி

போதமென்ற போதமெல்லாந் தங்கமாகும்
பொன்னிரும்பு கிட்டமாய்ப் போகவேண்டில்
சேதமென்ற அண்டத்தின் சவ்வுமொன்று
செயலற்ற அடியினுட கிழட்டுப்பூவே. (189)

பூவொன்று கைவிரலி னிகந்தானென்று
போட்டரைக்கத் தப்பில்லை சிறுநீராலே
மேவவே ரவிமுகத்திற் காய்ந்தபின்பு
விருப்பமுடன் நாய்ப்பித்து கூட்டிக்கொண்டு
தாவவே சுத்தெருக்கம் பாலலாட்டித்
தனலாடச் சுண்ணமப்பா சவ்வாதுயியங்கூட்டி
மாவிடையா யுண்டைசெய்து வைத்துக்கொண்டு
வாதாடிப் பொன்னுருக்க மாட்டுவாயே. (190)

கிட்டம் போன்னுகை.

மாட்டுவாய் வெங்கலமாய்க் கிட்டமாகும்
மகத்தான தங்கமெல்லாங் கிட்டமாகும்
கூட்டுவா யிம்மருந்து வழலைதொட்டுக்
கொண்டேதான் மாருட்டஞ் செய்துபோடு
பூட்டுவாய் தெரியாது வாதிமகனுனல்
பொன்னுகச் சொல்லுகிறேன் சாக்கெல்லாந்தான்
மூட்டுகின்ற மெழுகாக்கித் தைலமாக்கி
மூட்டினுல் கிட்டமெல்லாந் தங்கமாமே. (191)

தங்கச் சேந்தூரக் கற்பம்.

ஆமிந்தத் தங்கமப்பா நூறுமாத்து
அடைவாகச் செந்தூர வகையைக்கேளு
ஓமிந்தச் சவ்வீரஞ் சூடன்தாரம்
உத்தமனே கெந்திசிலை துருசு நீறு
சாமிந்த வழலையுட னூட்டிக்கொண்டு
சாதகமாய்த் தங்கத்திற் பூசிப்போடு
வேமிந்த ரவிக்குள்ளாய்ச் செந்தூரந்தான்
விள்ளுகிறேன் மஞ்சாடி நித்தங்கொள்ளே. ()

வாதி மாண்ட விபரம்.

கொள்ளப்பா கற்பமிது யென்னசொல்வேன்
கூறுகின்ற பலனப்பா சொல்லப்போகா
விள்ளப்பா யென்னவென்று வேதைபார்த்தேன்
விருதான வழலையினு லித்தனையுமாச்சு
துள்ளப்பா யென்னவென்று கெட்டுப்போனூர்
தொல்லுலகில் வாதியெல்லாஞ் செத்துப்போனூர்
கள்ளப்பா அரக்கப்பா கஞ்சாவப்பா
காளியுட பூசையென்று பெண்வைப்பானே. ()

பூசை வழலை.

பெண்ணைவைத்துப் பூசைசெய்து குடிப்பான்மட்டை
பிர்மனிட்ட குறையாலே அதுதான்வாய்ப்பு
சண்ணையவன் குருடான வாதியாகுஞ்
சாத்திரத்தைப் பாராத லூத்தமாண்பன்
பெண்ணைவைத்துப் பூசைசெய்வ தேதென்றுக்கால்
பிரபலத்தின் கன்னியப்பா வழலைமார்க்கம்
எண்ணுவதே காரியங்கள் நிசமாய்த்தோன்றும்
இறைவனெனப் பேரெடுத்து யிருக்கலாமே. ()

சதுரக்கள்ளி உப்புச் சுண்ணம்.

ஆமப்பா வழலையென்று நாமஞ்சொன்னூல்
அப்பனே சரக்கெல்லா மாண்டுபோகும்
போமப்பா வேதையது காணலாகும்
போக்கோடே யேறுதற்குக் குருவும்வேணும்
யேமப்பா பின்புமொரு வழியைச்சொல்வேன்
இபலான அண்டத்தின் கருச்செலத்தால்
ஆமப்பா சதுரமிட்ட கள்ளிச்சொத்தை
அப்பனே சுட்டுநீ சாம்பலாக்கே. (195)

சாம்பல்தனைத் தேசிநீர் தன்னிலேதான்
சாதகமாய் வற்றவைத்தா லுப்பதாகும்
வேம்பினுட பட்டையிலே தைலம்வாங்கி
வீரமிட்டு உப்பதனை யரைத்துக்கொண்டு

சாம்பலுக்குள் புடம்போடச் சுண்ணமாச்சு
தனித்ததொரு வழலையினு லெல்லாமாகும்
நோம்பிருந்து செத்தவன்போல் சரக்கெல்லாஞ்சாம்
நோகாமல் கொல்லுமப்பா உப்புத்தானே. (196)

தாரம் துருசுச் சுண்ணம்.

உப்பதனைச் சீனமுடன் வீரங்கூட்டி
உத்தமனே புழுகிட்டுத் துருசில்பூசிச்
செப்பமுள்ள வெண்கருவால் மயங்கப்போட்டு
திட்டமுட னூதச்சுண்ணம் வீரஞ்சீனம்
ஒப்பமுடன் புழுகிட்டுத் தாரந்தன்னை
உண்மையுடன் வாலுகையில் கல்லாணைக்குள்
தப்பாமல் வைத்தெரிக்கச் சுண்ணமாகுந்
தனிவெள்ளி ரவியோடே சேர்த்துப்போடே.

போடப்பா அன்பதிலே ஒன்று நீதான்
பொய்யாது யேழரையுஞ் சரியாய்க்காணும்
ஆடப்பா சரக்கெல்லாங் கைமுறையாய்ச்செய்து
அப்பனே வேதையிடத் தங்கமாகும்
தேடப்பா செம்பாலே வேதைதானுந்
திறமான செய்தியிது ஆறுஞ்சொல்லார்
மாடப்பா யென்றுக்கா லறியமாட்டான்
வாதியென்று பேரெடுத்து அலைவான்பாரே.()

செயநீர்.

அலையாமல் சொல்லுகிறேன் வழலைச்செய்தி
ஆருக்குந் தெரியாத பரமானந்தம்
மலையாதே யிந்தாலே ரவியைக்கட்டு
வாரமுடன் செயநீராய் வைத்துப்பாரு
துலையாத செலமாகும் பூமிதனில்
சொல்லரிது பெரியோர்கள் சொன்னுல்காணும்
வலையான பாசமெல்லாம் விட்டுயேகி
வாதமென்ற பாசமதை வருத்துவாயே. (199)

நூலடக்கம்.

வருத்துவேன் சாகாம லிருக்கச்சொல்லி
வளமான கற்பத்தைக் கொண்டுயேறு
யிருத்துவேன் சமாதியிலே தீட்சையெல்லா
மிறையளவு தப்பாமல் யென்னைப்போலப்
பொருத்துவேன் வேடமுதல் ஞானமார்க்கம்
பூரிப்பேன் கெவுனமிட்ட குளிகையீய்வேன்
திருந்துவேன் அறியாத செய்தியெல்லாம்
செப்பினே னிருநூற்று பாடற்குள்ளே. (200)

பாடலெல்லாம் பார்த்தாலே வாதந்தோணும்
பாராட்டா லொன்றுமில்லை ஞானமில்லை
ஆடலாங் குருவெல்லாந் தோய்ந்துபாரு
அப்பனே சாத்திரத்தைப் பாருபாரு
நாடெல்லாங் கருக்கண்டால் பொன்னாய்ப்போகும்
நாட்டடா வழலையுட கருவையப்பா
தேடலா மூப்பூவே கல்லானைக்குச்
சேரலா மிரவியுட னிந்துகாணே. (201)

இந்தாலே ரவிகட்ட வேணும்வேணும்
எடுத்ததொரு அண்டத்தி லேறவேணும்
வந்தாலே கருரெண்டு மறியவேணும்
மகத்தான குக்குடத்தை யறியவேணும்
சந்திரனு லிரவியொன்றாய் முடிக்கவேணும்
சராசரங்க ளத்தனையுங் காணவேணுங்
கொந்தான பூரமே சாரமாகுங்
கூட்டுகின்ற ரவிகோடா கோடிமுற்றே. (202)

அகத்தியர் வகார சூஸ்திரம் 200 முற்றிற்று.



உ

பரமபதி துணை.

அகத்திய முனிவர் திருவாய் மலர்ந்தருளிய

கருக்குரு சூத்திர மென்னும்

## வகார சூஸ்த்திரம் 200க்குச்

# சுருக்க சூத்திரம் 100.

காப்பு.

பூரணமாஞ் சுழினைநடுக் கமலமீதே
புகழ்பெரிய மூலகண பதியேகாப்பு
காரணமா யெனையாண்ட பராபரனைப்போற்றிக்
கட்டாக வாதத்தி லட்சங்காப்பு
தாரணமாய்ப் படுபாதி குறுக்கிச்சொன்னேன்
சார்வாக ஆயிரத்துக் கிருநூறு சூத்திரம்
வாரணமாய் குறுக்கிவைத்தேன் சூத்திரம்நூறில்
வகைதுகையும் கருக்குருவும் வகுத்தேன்பாரே (1)

பாரப்பா கட்டுவகைச் செந்தூரங்கள்
பற்பங்கள் செயநீர்கள் மெழுகுசுத்தி
சீரப்பா வழலைக்கு யிடைபாகங்கள்
திடமாக உட்கருவும் யேகமூலி
கூறப்பா மித்திரங்கள் தேவிபூசை
சுருக்குவகை உருக்கினங்கள் கோடாகோடி
யேறப்பா தொந்தங்கள் விபரமாக
யியம்புகிறேன் துருசினுட சுண்ணப்போக்கே.(2)

போக்கான வெந்தோன்றிக் கிழங்குகெந்தி
புகழான நவச்சாரம் லவணமோடு
வாக்கான கண்டங்கத் திரியின்வேரும்
வளமான சிவந்தகையன் சாற்றாலாட்டி

தாக்கான அருசுக்குக் கவசம்பூசச்
சாதகமாய்க் காடையென்ற புடத்தில்நீறும்
வாக்கான தில்லைநடக் குருவிளுட்டுக்
கறையில்லை கோடிதொந்தங் கண்டிலேனே. (3)

கண்டிலேன் கையான்சாறதனில்சற்றே
கால்கழஞ்சி குருவிட்டுச் சேர்த்துக்கொள்ள
விண்டிலேன் கரியுப்புச் சிவத்துபோகும்
வீரமுடன் சாரம்ரசம் கெந்திகட்டும்
பண்டிலேன் லிங்கமது உருகிக்கட்டும்
பாசாண மரிதாரம் நாகஞ்சாகும்
உண்டிலேன் நவச்சாரம் வங்கங்கட்டும்
மூட்டவே கோடிதொந்த மாகுந்தானே. (4)

வாலை பூசை.

தானென்ற தேவிசிறு வாலைபூசை
சாற்றுகிறேன் மெண்கோண மிதமெட்டாகும்
ஊனென்ற உள்ளரையில் நவகோணந்தான்
ஊணப்பா நடுவரையில் ஸ்ரீறீங்கென்றூணி
வானென்ற வட்டமிடு மேலேமூன்று
வரைநாலு வாசல்தே வதையைச்சேரு
கோனென்ற கொங்கணர்தான் கடைக்காண்டத்தில்
கொட்டினூர் பீசங்கள் குறிப்பைப்பாரே. (5)

பாரப்பா பூசைவிதி போகநாதர்
பாடினூர் சக்கரமொன் றெழுதிதுவைத்தார்
ஆரப்பா யென்னைப்போலச் சொல்லப்போருர்
ஆச்சரிய மாச்சரிய மாயினூட்டு
சீரப்பா பூசைமட முழந்தானஞ்சு
சிறப்பாகப் பணிசெய்து விதானஞ்செய்து
காரப்பா நாக்காலி பீடம்போட்டுக்
கமகமென்றே தூபங்கள் காட்டுமேலே. (6)

மேலாகத் தேவியுட சக்கரத்தைவைத்து
விண்ணுட்டச் சுழினையினுல் பூவைச்சாற்றி
பாலான கும்பம்வைத்து ஆடைசாற்றிப்
பாணமொடு சுற்றிரெம்பப் படைத்துமுன்னே
சேலான சோடச வுபசாரங்கள்செய்து
தேவிமுதல் கணபதியுஞ் சிவனைப்போற்றி
ஞாலமெல் லாம்படைத்த பரமேயென்று
நன்றுகத் தூபமொடு தீபங்காட்டே. (7)

காட்டியே மணியோசை சங்குநாதங்
காளஞ்சி முதலாகப் பதினெண்வாத்தியம்
மூட்டியே தோத்தரித்து மவுனமாகி
மூனையான லாடகே சரத்தைநோக்கி
நாட்டியே பூசைசெய்து பாணங்கொண்டால்
நாயகியாள் தேவிபிர சன்னமாவாள்
வாட்டியே நசித்திடுவாள் பூசைவிட்டால்
வாதிகளே யிந்தமுறை வகுத்தேன்சித்தே. (8)

சித்தாக வேணுமென்றுல் பூசைவேணும்
சிவயோக சாதனையுஞ் செய்யவேணும்
பத்தாகப் பெரியோரை வணங்கவேணும்
பாச்சவே வேதைக்கு யின்னூல்வேணும்
முத்தான பூரணசூத் திரமும்பாரு
முக்கியமா யிப்பூசை யிருநூறும்பாரு
சித்தாக யிந்தமுறை பார்த்தோர்க்கெல்லாஞ்
சிறமான சிவயோகி சித்தராமே. (9)

தானான நாகமொடு சூதஞ்சேரு
சமனுகத் துருசுதனைக் கூட்டிக்கொண்டு
மானான் பூனீறு சீனக்காரம்
வருடமது சென்றபழம் புளியுஞ்சேர்த்து
பானான பழச்சாற்று லாட்டிவில்லை
பதமாக ரவிமுகத்தில் காய்ந்தபின்பு

தேனுன பீங்கானில் வைத்துநன்ருய்ச்
செங்கதிரோன் முகங்கண்டால் தைலம்வாங்கே.()

வாங்கியே தைலத்தில் மூன்றுமாட்டி
வளமாக வில்லைதட்டிக் காயப்போடு
தாங்கியே யெடுத்துப்பார் சுண்ணமாகுஞ்
சாதகமாய்ப் பீங்கானில் தைலம்வாங்கு
தூங்கியே திரியாதே லிங்கத்துக்குச்
சுருக்கிடவே உட்கருவைச் சொல்லக்கேளு
பாங்கியாய்ப் பூனீறு வீரம்போக்கு
பாய்ச்சவே செம்பிலிடு வெள்ளிதானே. (11)

வெள்ளியொடு செம்பிடைதான் ரெண்டுமாக
விரைந்தாட்டத் தங்கமொன்று உறுதியாகும்
கொள்ளியென்ற பயல்களுக்குச் சொன்னல்பாவம்
குணமான சீடனென்ருல் சோதித்துச்சொல்
வள்ளியென்ற கிழங்குக்கு மிப்படியேயாகும்
வளமான கற்ருழைக் கிப்படியேயாகும்
துள்ளியென்ற ரசங்கட்டுஞ் சரக்கெல்லாஞ்சாகும்
குருசூட்ச மிதுயின்னந் தொழிலைக்கேளே (12)

கேளப்பா தவசிமுருங் கிலைச்சார்வாங்கிக்
கொடியான கரியுப்பை யாட்டிநன்ருய்
வாழப்பா வில்லைதட்டி யுலாப்போடு
மகத்தான ஓட்டில்வைத்துச் சீலைசெய்து
நீளப்பா குக்குடத்தி லுப்புக்கட்டும்
நிசமான செந்தூரம் வெண்மையாகும்
ஆமப்பா வல்லாரை குறட்டைமேனி
ஆரைக்கு மிப்படியே உப்பைக்கட்டே. (13)

கட்டவே பெரும்பாலை கருத்ததும்பை
காக்கினைக்குஞ் சீந்திக்கும் பவுரிகத்திரிக்குஞ்
கட்டவே செய்யுமடா ஒவ்வொன்ருலே
கருநொச்சி செவ்வகத்திச் சாற்ருல்கட்டுந்
திட்டமுடன் கட்டினதோ ருப்புக்காரஞ்
செயமான நவச்சார மூன்றுமாட்டி

தேனான பீங்கானில் வைத்துநன்றாய்ச்
செங்கதிரோன் முகங்கண்டால் தைலம்வாங்கே.()

வாங்கியே தைலத்தில் மூன்றுமாட்டி
வளமாக வில்லைதட்டிக் காயப்போடு
தாங்கியே யெடுத்துப்பார் சுண்ணமாகுஞ்
சாதகமாய்ப் பீங்கானில் தைலம்வாங்கு
தூங்கியே திரியாதே லிங்கத்துக்குச்
சுருக்கிடவே உட்கருவைச் சொல்லக்கேளு
பாங்கியாய்ப் பூனீறு வீரம்போக்கு
பாய்ச்சவே செம்பிலிடு வெள்ளிதானே. (11)

வெள்ளியொடு செம்பிடைதான் ரெண்டுமாக
விரைந்தாட்டத் தங்கமொன்று உறுதியாகும்
கொள்ளியென்ற பயல்களுக்குச் சொன்னால்பாவம்
குணமான சீடனென்றால் சோதித்துச்சொல்
வள்ளியென்ற கிழங்குக்கு மிப்படியேயாகும்
வளமான கற்றாழைக் கிப்படியேயாகும்
துள்ளியென்ற ரசங்கட்டுஞ் சரக்கெல்லாஞ்சாகும்
குருசூட்ச மிதுயின்னந் தொழிலைக்கேளே (12)

கேளப்பா தவசிமுருங் கிலைச்சார்வாங்கிக்
கொடியான கரியுப்பை யாட்டிநன்றாய்
வாழப்பா வில்லைதட்டி யுலாப்போடு
மகத்தான ஓட்டில்வைத்துச் சீலைசெய்து
நீளப்பா குக்குடத்தி லுப்புக்கட்டும்
நிசமான செந்தூரம் வெண்மையாகும்
ஆமப்பா வல்லாரை குறட்டைமேனி
ஆரைக்கு மிப்படியே உப்பைக்கட்டே. (13)

கட்டவே பெரும்பாலை கருத்ததும்பை
காக்கினைக்குஞ் சீந்திக்கும் மவுரிகத்திரிக்குஞ்
கட்டவே செய்யுமடா ஒவ்வொன்றாலே
கருநொச்சி செவ்வகத்திச் சாற்றால்கட்டுந்
திட்டமுடன் கட்டினதோ ருப்புக்காரஞ்
செயமான நவச்சார மூன்றுமாட்டி

காச்சப்பா பூனீரு பலமதொன்று
கல்லுப்பாஞ் சிவஉப்புப் பலமதொன்று
நீச்சப்பா கரியுப்புப் பலமதொன்று
நிலையான சூடனிற் பலமதொன்றே. (18)

ஒன்றாகக் கண்டதுக்குச் சமன்தான்கேளு
உறுதியாங் களிச்சுண்ண மொன்றாய்ச்சேர்த்து
நன்றாக வெண்கருவு மெருக்கன்பாலும்
நல்லதெளி வுண்டாகுங் குருத்தான்போட்டுக்
கொண்டாட்டிச் சாமமென்று வில்லைதட்டிக்
குருவாகு மூழப்புடத்திற் பின்புசொல்வேன்
சென்றான வல்லதுவிட்டு ஆட்டிவில்லை
திறமான ஐங்குகைக்குள் சுண்ணங்காணே. (19)

காணவே சாயவேர் கொழுஞ்சிநொச்சி
கற்றாழை யிதுநாலுந் தூளாயாட்டி
பூணவே அரிதார னீருஞ்சூதம்
பூரமொடு வெடியுப்புச் சுண்ணம்நாலுந்
தோணவே பூசிட்டுத் தூளில்வைத்துச்
சுணங்கனிறும் புடமிட்டு வங்கம்நீறும்
பேணவே யிரண்டுக்குங் கருநொச்சிக்கும்
பேரான யிருவங்கம் வலியும்பாரே. (20)

பாரப்பா வங்கநீறு தன்னைவாங்கிப்
பாய்ச்சுவாய் கட்டினதோர் சூதம்பாதி
சேரப்பா துருசுவெள்ளை வீரங்கெந்தி
சிலைரெக்கு லிங்கமொரு யெட்டுக்கொன்று
சாரப்பா பழச்சாற்றா லாட்டிவில்லை
சாதகமாய்க் குப்பிக்குள் ளிட்டுநன்றாய்ச்
சேரப்பா அப்பிரகங் குமரிச்சாற்றால்
செயலாகப் பூசிரவி யுலரப்போடே. (21)

உலர்த்தியபின் செங்கல்தூள் சட்டியிட்டு
உரைப்பாகக் குப்பிதனை நடுவேவைத்து
மலர்ந்ததொரு முருக்கம்பூத் தூளால்மூடி
வளமாகச் செங்கல்தூள் மேலேயிட்டு

மலர்ந்தசார் மேலோடு மூடிச்சீலை
மண்செய்து யடுப்பேற்றிச் சிவனைப்போற்றி
அலர்ந்தகலை சந்திரோத யந்தானிந்த
ஆவரையின் விறகினால் சாமம்ரெண்டே. (22)

ரெண்டானால் சிவந்தபதம் முருக்கம்பூப்போல்
இருக்குமது வெள்ளியிலே யேழுமாத்து
தண்டாக நாகமிந்தப் படியேபண்ணு
சாதகமாய்ச் சூதமிந்தப் படியேசெய்தால்
நன்றான செந்தூர மாகும்பாரு
நலமான விட்டகுறை யார்க்குமல்லால்
சண்டாளப் பயல்களுக்குப் பலியாதய்யா
சாத்திரமுங் கிட்டாது தயங்குவானே. (23)

தயங்காமல் செய்கின்ற வாதிக்கெல்லாந்
தப்பாது பத்தரைக்கு மேல்கிட்டாது
செயங்காணுஞ் சித்தருக்குக் கமலமாத்துத்
திறமான ரிசிகளுக்குக் கோடாகோடி
பயங்காணு மூலகத்தோர் செய்யமாட்டார்
பத்தரைக்கு மேலேது கிடையாதய்யா
மயங்காமல் சிவயோகி பெரியோரானால்
முறையான சித்தருக்கு யெய்துந்தானே. (24)

பாசாணச் செந்தூரம்.

தானேகேள் சங்கம்வேர்க் கொழுந்தோடொக்க
தைவேளை நவச்சார மிணங்கன்சுண்ணம்
மானேகேள் துருசுவெள்ளை வீரம்பூரம்
மான்செவியின் கள்ளிச்சா ரதனாலாட்டி
மானேகேள் நாகத்தைப் பூசிச்சீலை
மண்செய்து குக்குடத்தில் மாண்டுபோகும்
மானேகேள் எடுத்துப்பார் வெண்மையென்ன
அறிந்துபார் செந்தூரப் போக்கைத்தானே. ()

போக்கான நாகபற்பம் பலந்தானொன்று
பூரமொடு சவ்வீரம் கெந்திலிங்கம்

பாக்கான துருசுவெள்ளை லவணச்சுண்ணம்
பரிவான வெண்காரம் வங்கபற்பம்
நாக்கான நவச்சாரஞ் சிலையுஞ்சூதம்
நலமான மால்துருசு யிந்திரன்பூச்சி
தாக்கான பழச்சாற்று லாட்டிமுன்போல்
சாதகமா யெரித்திடவே செந்தூரமாமே. (26)

ஆமப்பா செம்பிலிடு விராகன்மாத்து
அரகரா நோயெல்லா மகன்றுபோகும்
ஓமப்பா செந்தூரஞ் செயநீர்பண்ணி
ஓகோகோ லிங்கத்தைக் கட்டலாகுந்
தாமப்பா வாதிகளே மூன்னூற்மாத்து
தாண்டவமாம் வழலைபட்டால் மேலேயேறும்
காமப்பா லாசைகொண்ட சண்டாளர்க்குக்
காணாது கெதியில்லை கடினந்தானே. (27)

கடினமாய் வங்கத்தை யுருக்கிநன்றாய்க்
கசப்பான வேம்பின்சா ரதனில்சாய்த்து
துடினமாம் வீரமரி தாரம்வெள்ளை
துடியான துருசுநீர் மூன்றுஞ்சேர்த்து
படினமா மிண்டஞ்சார் தன்னாலாட்டிப்
பலமொன்று வங்கத்தின்மேல் கவசித்தேதான்
கடினமா மூழப்புடத்தில் தாக்கிவாங்கி
கசடற்ற திருநீறுபோ லாகுமெண்ணே. (28)

யெண்ணவே யற்பத்தால் கோடாகோடி
லெக்கில்லை கட்டுமுதற் செயநீர்பற்பம்
பண்ணவே செந்தூரங் கோடாகோடி
பாசாணஞ் சூதமொடு நாகஞ்சாகும்
உண்ணவே நோய்களெல்லா மகண்டுபோகும்
உத்தமனே கவர்கோடி தொந்தஞ்செய்தால்
நண்ணவே யித்தனைக்கு மறிந்தோன்வல்ல
நன்றாச்சு யிந்நூல்தான் யெய்துவோர்க்கே. ()

புத்தி.

யெய்துமென்று சூத்திரந்தா னூறுங்கேளு
யிடும்பான மடையருக்குக் கிட்டாதப்பா
யெய்துமென்று யிந்தநூல் பெருமைதன்னை
யியம்புதற்கு நாவினால் முடியாதப்பா
யெய்துமென்று லோகத்தில் கோடிக்கொன்று
யிருக்கின்ற பெரியோர்க்கு யெய்துமின்னூல்
யெய்துமென்று சாத்திரத்தைக் கேட்டாலுந்தான்
இல்லையென்று ஆணையிட்டு யிருப்பார்தானே ()

இருப்பார்கள் பெரியோரை வணங்கிநித்தம்
இன்பமுடன் பன்னிரெண்டு வருடங்காரு
சிரிப்பார்கள் மனதுள்ளே நடத்தைகண்டு
திறஞ்செய்வார் நாலீய்ந்து சீடனென்று
செப்புவர்கள் நல்லகுண மானால்சொன்னேன்
சாயுட்சிய பதம்பெற்றோர்க் கெய்துமின்னூல்
வெருப்பார்கள் போலிருப்பார் வேதைகண்டோர்
வேணபடி முறைசெய்வார் விபரங்கேளே.(31)

கேளப்பா நவலோக மாரணந்தான் சொன்னேன்
கெடியான வயித்தியந்தான் யிருநூற்றைந்தில்
தேளப்பா கொட்டுதல்போல் செந்தூரந்தான்
திறஞ்சொல்வேன் இரும்புக்குத் தாரங்கெந்தி
வாளப்பா வெள்ளியிரு வங்கத்துக்கு
மாஸ்தேவி வெடியுப்பு வெள்ளைசீனஞ்
சூளப்பா செம்புக்குக் கெந்திவங்கஞ்
சூதமொடு துருசுவெள்ளைச் சாரமூன்றே. (32)

யேக மூலிகை.

சாரமொடு நாகத்தைத் தாக்கிக்கொல்லுஞ்
சதாசிவமாந் தங்கத்துக் கண்டநீரால்
காரமொடு அப்பிரகம் நிமிளைசாகுங்
கண்டபடி பித்தளைக்குக் காட்டக்கொல்லும்
பாரமல்ல யேகமூ லிகையைக்கேளு
பாசாணம் நவச்சாரம் சீனம்பூரம்

பாக்கான துருசுவெள்ளை லவணச்சுண்ணம்
பரிவான வெண்காரம் வங்கபற்பம்
நாக்கான நவச்சாரஞ் சிலையுஞ்சூதம்
நலமான மால்துருசு யிந்திரன்பூச்சி
தாக்கான பழச்சாற்று லாட்டிமுன்போல்
சாதகமா யெரித்திடவே செந்தூரமாமே. (26)

ஆமப்பா செம்பிலிடு விராகன்மாத்து
அரகரா நோயெல்லா மகன்றுபோகும்
ஓமப்பா செந்தூரஞ் செயநீர்பண்ணி
ஒகோகோ லிங்கத்தைக் கட்டலாகுந்
தாமப்பா வாதிகளே மூன்னூற்மாத்து
தாண்டவமாம் வழலைபட்டால் மேலேயேறும்
காமப்பா லாசைகொண்ட சண்டாளர்க்குக்
காணாது கெதியில்லை கடினந்தானே. (27)

கடினமாய் வங்கத்தை யுருக்கிநன்றாய்க்
கசப்பான வேம்பின்சா ரதனில்சாய்த்து
துடினமாம் வீரமரி தாரம்வெள்ளை
துடியான துருசுநீர் மூன்றுஞ்சேர்த்து
படினமா மிண்டஞ்சாறுதன்னாலாட்டிப்
பலமொன்று வங்கத்தின்மேல் கவசித்தேதான்
கடினமா மூழப்புடத்தில் தாக்கிவாங்கி
கசடற்ற திருநீறுபோ லாகுமெண்ணே. (28)

யெண்ணவே யற்பத்தால் கோடாகோடி
லெக்கில்லை கட்டுமுதற் செயநீர்பற்பம்
பண்ணவே செந்தூரங் கோடாகோடி
பாசாணஞ் சூதமொடு நாகஞ்சாகும்
உண்ணவே நோய்களெல்லா மகண்டுபோகும்
உத்தமனே கவர்கோடி தொந்தஞ்செய்தால்
நண்ணவே யித்தனைக்கு மறிந்தோன்வல்ல
நன்றாச்சு யிந்நூல்தான் யெய்துவோர்க்கே. ()

புத்தி.

யெய்துமென்று சூத்திரந்தா னூறுங்கேளு
யிடும்பான மடையருக்குக் கிட்டாதப்பா
யெய்துமென்று யிந்தநூல் பெருமைதன்னை
யியம்புதற்கு நாவினால் முடியாதப்பா
யெய்துமென்று லோகத்தில் கோடிக்கொன்று
யிருக்கின்ற பெரியோர்க்கு யெய்துமின்னூல்
யெய்துமென்று சாத்திரத்தைக் கேட்டாலுந்தான்
இல்லையென்று ஆணையிட்டு யிருப்பார்தானே ()

இருப்பார்கள் பெரியோரை வணங்கிநித்தம்
இன்பமுடன் பன்னிரெண்டு வருடங்காரு
சிரிப்பார்கள் மனதுள்ளே நடத்தைகண்டு
திறஞ்செய்வார் நூலீய்ந்து சீடனென்று
செப்புவர்கள் நல்லகுண மானால்சொன்னேன்
சாயுட்சிய பதம்பெற்றோர்க் கெய்துமின்னூல்
வெருப்பார்கள் போலிருப்பார் வேதைகண்டோர்
வேணபடி முறைசெய்வார் விபரங்கேளே.(31)

கேளப்பா நவலோக மாரணந்தான் சொன்னேன்
கெடியான வயித்தியந்தான் யிருநூற்றைந்தில்
தேளப்பா கொட்டுதல்போல் செந்தூரந்தான்
திறஞ்சொல்வேன் இரும்புக்குத் தாரங்கெந்தி
வாளப்பா வெள்ளியிரு வங்கத்துக்கு
மால்தேவி வெடியுப்பு வெள்ளைசீனஞ்
சூளப்பா செம்புக்குக் கெந்திவங்கஞ்
சூதமொடு துருசுவெள்ளைச் சாரமூன்றே. (32)

யேக மூலிகை.

சாரமொடு நாகத்தைத் தாக்கிக்கொல்லுஞ்
சதாசிவமாந் தங்கத்துக் கண்டநீரால்
காரமொடு அப்பிரகம் நிமிளைசாகுங்
கண்டபடி பித்தளைக்குக் காட்டக்கொல்லும்
பாரமல்ல யேகமூலிகையைக்கேளு
பாசாணம் நவச்சாரம் சீனப்பூரம்

வீரமொடு புழுகுவெடி யுப்புக்காரம்
விதமான சூதம்பூ னீரும்கெந்தி. (33)

கெந்தியொடு வகைவீதஞ் சமனாய்ச்சேர்த்துக்
கெடியான பழச்சாற்று லாட்டிமைபோல்
பந்திவிட்டுச் செய்யாதே மருந்தைப்பூசிப்
பச்சிலையி னால்நீறு சொன்னதெல்லாம்
முந்தியிந்தக் குருச்செய்தா லுறுதியாகும்
முறையான வயித்தியத்தி லொன்றும்பொய்யா
அந்தியென்ற திருசுநீர் கூடச்சேரு
அரகரா வயித்தியத்துக் காணிதானே. (34)

செய நீர்.

ஆணியாஞ் செயநீரை சொல்லக்கேளு
அப்பனே புலத்தியனே ஆடும்ஆட்டுப்
பாணியாம் நவச்சாரங் காரஞ்சீனம்
பாரன்ன பேதிவெடி யுப்புமொன்றாய்க்
காணியாஞ் சாற்றாலே யாட்டிவில்லை
கனமான பீங்கானுக் குள்ளேசாணி
ஊணியே மூன்றுநாள் சென்றபின்பு
ஓகோகோ கட்டுவகைச் செயநீராச்சே. (35)

ஆச்சென்ற செந்தூர நீரைக்கேளு
அப்பனே சீனம்பூ நீருவீரம்
வாச்சென்ற மடல்துத்தம் நாகங்கெந்தி
மனோசிலைசேய் சூதமிவை பழச்சாற்றாட்டிக்
காச்சென்ற பீங்கானில் நீரைவாங்கு
கரையில்லாச் செந்தூர முடிக்கலாகும்
வேச்சென்ற மெழுகுவகை நீரைக்கேளு
வெடியுப்பு நவச்சாரங் காரமாமே. (36)

காரமாம் வன்னிகற்பங் கட்டச்சொல்வேன்
கைக்கடங்காச் சரக்கெல்லா மெழுகாய்ப்பண்ணு
தாரமாங் மிளகுதக் காளிமேனிச்
சாறுடன் பனங்கள்ளு செருப்புக்கையான்

சாரமாய்ச் சம்பளச்சார் மூலைப்பால்கத்தான்
சாதகமா யெடுத்துச்சார் வைத்துமேதான்
வாரமாய்ச் சுருக்கிடுநீ யொவ்வொன்றாக
மகத்தான சுத்தியப்பா லிங்கங்காணே. (37)

காணப்பா லிங்கமது சுத்தியானால்
கருக்கேளு துருசுவெள்ளை யிணங்கன்சுண்ணம்
வேணப்பா சூடநீறு வங்கபற்பம்
விரிவான நாகபற்பஞ் சீனம்வீரந்
தூணப்பா பூநீறு கட்டினதோருப்புச்
சுயமான பழச்சாற்று லாட்டிப்பூசி
பேணப்பா மஞ்சளுட கருவில்வைத்துப்
பிலமாக ஆரைபெரும் பாலையாட்டே. (38)

ஆட்டியே முட்டைதனைப் பொதிந்துசீலை
யப்பனே செய்துலர்த்திப் புடந்தான்கோழி
மூட்டியே யெடுத்துப்பார் களங்கமாகும்
முன்னேது பின்னேது லிங்கத்தாட்டு
ஊட்டியே செம்பிலிட்டு வெள்ளிசேர்ந்தா
லூறுதியடா விராகன்மாத் தொக்கும்பாரு
தேட்டிலே யிதைத்தேடு வேதைகாணுஞ்
சிவசிவா சாரத்தின் கட்டுத்தானே. (39)

சாரக் கட்டு.

தானென்ற தொட்டாக்கால் வாடிச்சாறும்
தைவேளை யாரைகுளி தாமரையுங்கையான்
மானென்ற யோட்டில்வைத்துச் சுருக்குத்தாக்கு
மாசற்ற தந்தம்போல் கட்டுஞ்சாரம்
ஊனென்ற உயிர்வாங்கும் நாகந்தன்னை
யொருகோடி தொந்தமுதல் கோடாகோடி
வானென்ற முடிவரைக்கு மோடுமப்பா
மகத்தான சாரத்தின் மார்க்கந்தானே. (40)

மார்க்கமென்ன தாளையுட சாறுவாங்கி
வளமான கரியுப்பைக் கட்டிப்பாரு

பார்க்கவென்ன சீனம்வெடி யுப்புக்கட்டு
மால்தேவி கெந்தகமும் மாயும்மாயும்
நீக்கமில்லை சூதமொடு வங்கம்நாகம்
நீலகண்ட றுபத்து ஞுஞ்சாகும்
தாக்கினால் கோடான கோடிதொந்தத்
தாண்டவமாஞ் சித்தகத்தி ஆரைசீந்தி. (41)

சீந்தியுடன் புளியாரை செம்பசளைக்கொத்தான்
சிறுகீரை வல்லாரை சிறுபுட்காலை
காந்திநெல்லிக் கோவைதொட்டி தாங்கிகுள்ளி
கையான் நீர் மூள்ளிதும்பை வேளை நீலி
சீந்தியென்ற தொட்டிமணி தாங்கிமத்தை
செம்மூள்ளி அகத்தி நிம்பம் பாலைமேனி
விந்தியென்ற காக்கைமுன்னை யருகுபாகல்
விஷமூங்கில் வெந்தோன்றி பழச்சார்மல்லி. ()

மல்லிசதுரக் கள்ளிசிறு சின்னிகன்னி
மாவுலிங்கு ஆலமூத்தஞ் சவரிதும்பை
வில்லைதலை காணியொட்டி நெறிஞ்சிவாடி
மிகநெருப்புக் குன்றிதுத்தி சங்குநாகல்
கொல்லங்கோ வைக்கிழங்கு பிரண்டைபுங்கு
குறட்டையல்லி பெருநெறிஞ்சி கொன்றைவேலி
புல்லாம ணக்குபேய்க் குமட்டிப் பூநாகப்
பூவரசு கொடியலரி சங்குயிண்டே. (43)

இண்டுகஞ்சா பிரண்டைதில்லை கன்னிகள்ளி
யித்திசிவந் தல்லிமான் செவியின்கள்ளி
வண்டுகொல்லி யாவரைதக் காளிபண்டி
மாதளையுஞ் செங்கள்ளி அல்லிமின்னி
சண்டைபெற்ற அழுகண்ணி தொழுகண்ணியோடு
சாங்கமாங் காந்தைநங்கை பெரியானங்கை
கண்டுபிரட்டி யெருக்கலையு மூள்ளி
காட்டாமணக்கு மொசுமொசுக்கை கோழியெண்ணே.

யெண்ணவே மூலிகைதான் கோடாகோடி
    யிலக்கில்லை யெழுதவென்று லென்னால்கூடா
மண்ணமா வேளைச்சார் தன்னைவாங்கி
    மாட்டுவாய் லவணமொன்று காரசாரம்
பண்ணவே வெடியுப்புச் சீனங்கண்டர்
    பாய்ச்சியரை செம்புக்குப் பூசிஓட்டில்
திண்ணவே புடமிந்நீ கோழியாக
    செம்பூறல் பறந்தோடுங் கனகந்தானே. (45)

கனகமென்ற நாகஞ்சாம் வங்கங்கட்டுங்
    கரியுப்பு மணியாகுஞ் சூதங்கட்டும்
அனகமென்ற அறுபத்து நால்சரக்குமாழும்
    அப்பனே யினமறிந்து மெழுகுபற்பம்
கனகமென்ற செந்தூரஞ் செயநீர்கட்டுங்
    கரையில்லை கோடான கோடிவேதை
கனகமென்ற பூமியிலே மூலைத்தமூலி
    கைமுறையாய் முன்சொன்ன படியேபாரே. (46)

பாரப்பா ஒவ்வொன்றாய் மூலியெல்லாம்
    பரிவாகக் கட்டுமோவ் வொன்றுகக்கோடி
சாரப்பா யிதையெல்லாம் பாடப்போய்நாம்
    தாரணியி லின்னூலை விடாமலய்யா
காரப்பா வென்றுசிவன் சித்தர்கையில்
    காட்டாமல் ஒழித்துவைத்தார் குகைகள்தோறும்
ஆரப்பா யின்னூல்தான் கிட்டாதப்பா
    அரிதரிது யோகிக்கு யெய்துமாத்தே. (47)

மாத்தான அரிதாரம் களங்கமாகும்
    மனோசிலையும் பற்பமாம் லிங்கங்கட்டும்
மாத்தான பாசாணங் கட்டுஞ்சீனம்
    வங்கமொடு சரக்கெல்லா மொவ்வொன்றாக
கூத்தான யேகமூ லிகையினாலே
    குவிந்தாடுந் துருசுயென்ற ராசாவாலே
சேத்தாடு யினமறிந்து வேதைபாரு
    திறமிதுதான் திறமிதுதான் பலிக்கும்பாரே. ()

பலித்ததென்று ஆணுவத்தால் நூலீயாதே
பரமான ரகசியத்தை வெளிவிடாதே
கலிக்கியுக மாவதென்ன அதர்மத்தாலே
காரணத்துக் கேயெண்ணுத் தன்மையாலே
வலிக்குரங்கு ஆனதென்ன மாய்கையாலே
மனமொன்றிப் பூரணமாய் வாசியூதி
யொலித்திட்டுச் சிதம்பரமுங் கண்டுபாரு
ஒருநாளும் பிறவாத யோகிதானே. (49)

தானென்ற மனமல்லோ சத்திருபஞ்
சார்ந்துகொண்டு கேசரிதான் சிவமுமாச்சு
பூனென்ற நின்றவிடம் மவுனமாச்சு
பூரணத்தின் சூட்சமிது சித்திமுத்தி
வீனென்ற மாத்தெல்லா மேதுண்டாச்சு
விட்டகுறை பிர்மணு மெழுத்துமாச்சு
கானென்ற நிதிணுலே யெல்லாமாச்சு
கண்டறிநீ நிற்குணத்தின் சூட்சந்தானே. (50)

உப்புப் பற்பம்.

சூட்சமென்ற முருங்கையிலேச் சாருவாங்கிச்
சுண்டிடவே முலேப்பால்விட் டூறிக்காய்ந்து
சூட்சமென்ற உப்பதனை யரைத்துவில்லை
சுயமான குக்குடத்தில் வெளுத்துநீறும்
சூட்சமிது பதனமாய் வைத்துக்கொண்டு
சூட்டுவாய் வாயுவொடு மந்தம்போகுஞ்
சூட்மதாய்த் திருமடா பற்பத்தாலே
துரைகோடி யினமறிந்து வேதைபாரே. (51)

வேதையது பாய்ச்சவென்றல் செந்தூரங்கேள்
வெளுத்ததொரு உப்பினுட களஞ்சிதாலு
வாதியென்றல் செய்தொழிலேக் கண்டுபாரு
மனோசிலையுஞ் சேய்சூதம் வெங்காரம்வீரம்
பாதையிது கெந்தகமும் பூரம்லிங்கம்
பரிவாகக் கால்களஞ்சு பழச்சாற்றுட்டி

வேதையென்ன நவச்சாரம் முன்போல்செய்து
விரைந்தூட்டத் தங்கமதாங் கருவைக்கேளே. ( )

கருவென்ன நவச்சாரந் தன்னைவாங்கிக்
கானகத்தின் முருங்கிலைச்சா ரதனைவிட்டுக்
கருவென்ன கல்வத்தி லாட்டி நன்றாய்க்
கனமான வில்லைசெய்து உலர்ந்தபின்பு
தருவென்ன பூநீற்று லெரித்துவாங்கு
தந்தம்போல் கட்டும்நவச் சாரந்தானும்
மருவென்ன நாகந்தான் கண்விட்டாடும்
வளமான ரவியப்பா ஊறல்போமே. (53)

ஊறல்போஞ் செயனீரால் சரக்கெல்லாஞ்சாம்
ஒருவருக்குஞ் சொல்லாதே மூலியாலே
நாறல்போங் கெந்தகமுந் துருசுங்கட்டும்
நன்றாக யால்தேவி லிங்கங்கட்டுஞ்
சீறல்போம் நாகமது கண்விட்டாடுஞ்
சிலைபூரஞ் சூதமொடு வெவ்வேறுவர்ணம்
மாறல்போ மினமறிந்து வேதைபாரு
மாத்துயரு மூன்றாகும் பசும்பொன்னாமே. (54)

பசும்பொன்னாங் காணிசிறு கீரைச்சாறு
பண்பாக வாங்கிடுவாய் படியொன்றப்பா
கசும்பொன்னாஞ் சாரத்தை யரைத்துருட்டிக்
காய்ந்தபின்பு சுண்ணம்பி லெரித்துவாங்கு
வசம்பொன்னா நவச்சாரம் முழுக்கட்டாச்சு
வாதியென்று விதுபாரு தொழிலோகோடி
நிசம்பொன்னா மெருக்கிலைக்கிப் படியேபண்ணு
நீலிக்கு வேளைக்கு மிப்படி நீசெய்யே. (55)

இப்படியே செய்துபார் ஆரைமல்லி
யிண்டுவெள்ளைச் சாரணைக்கும் பிரண்டைகோவை
சொல்படியே செய்துபார் மூலிகையினாலே
சொல்லொன்றுந் தப்பாது சாரங்கட்டும்

மெய்யப்பா வெந்தோன்றி துத்திக்குங்கட்டும்
வெற்றிலேக்குஞ் சங்குக்கு மிப்படியேகட்டும்
அப்படியே செய்கின்ற சாரத்தாலே
அரகரா கோடிவித்தை அரன்சொன்னூரே. ()

சொன்னூரே யெந்தனுக்கு யீசன்தானுஞ்
சோர்வில்லே புலத்தியனே உனக்காய்ச்சொன்னேன்
பொன்னுகப் பூத்ததொரு வேளைச்சாறு
புகழ்பெரிய சூதத்தைக் கட்டுங்கட்டும்
பொன்னுன துருசுவெள்ளை உப்பினுலே
பூரமொடு நவச்சாரம் லிங்கங்கட்டும்
கல்நாரு கெந்தகமுந் துருசுதேவி
கரியுப்பு வெடியுப்பு சீனஞ்சாமே. (57)

சீனமென்ற தன்றிமற்ற சரக்கெல்லாஞ்சாம்
சிவசிவா ஒவ்வொன்றல் கோடிவேதை
பாணமென்ற பூசையினுல் சத்திதீட்சை
பார்க்கின்ற ததனுலே தேவிதீட்சை
ஊணமென்ற பேச்சேது ஆசையாலே
உருவழிந்த தெதுனுலே கர்மத்தாலே
மானமென்ற சொல்லேது ஞானத்தாலே
மாழாம விருப்பதுதான் வாசியாலே. (58)

வாசியென்ற பேரேது யோகத்தாலே
மவுனமென்ற ஒளியேது ஊமையாலே
காசியென்ற பதியேது மூலத்துள்ளே
கனிந்தவிடங் கேசரத்தே காசியாச்சு
நாசியென்ற யிடமேது சுழினைமீதில்
நாடிநின்ற விடமல்லோ காசியாச்சு
தேசியென்ற திருநாமமேதுனுலே
சிதம்பரத்தில் நடனவொலி சென்றபேர்க்கே.( )

சென்றுசென்று பூரணத்துள் நடக்கையாலே
சிவசிவா சிவயோகி சித்தராச்சு
நன்றுநன்று பெரியோர்க ளிப்படியேசெய்வார்
ஞானியென்று லிந்தநூல் வைத்திருந்தோர்

கண்டுகண்டு மனந்தேறி நிலையில் நிற்கக்
காரணமும் பூரணமுங் கண்டபேர்கள்
ஒன்றுமொன் றுஞ் சொல்லீர்கள் யெழியோர்போல
உலகத்தில் கோடிக்கொன் றிருப்பார்தாமே. ()

இருப்பார்க ளவரிடத்தி லிந்தநூல்தான்
யிருப்பதுவே யல்லாமல் கிட்டாதய்யா
இருப்பார்க ளில்லறத்தோ டெல்லாஞ்சேர்ந்து
யிருந்தவர்கள் மனமறிய வெகுநாள்செல்லும்
இருப்பார்கள் வருமையற்றுப் பித்தன்போல
யிருதயத்தில் மனங்கலங்கா திருந்துநாட்ட
இருப்பார்கள் பூரணமாய் லலாடமீதே
யிருதயத்தில் நகைசெய்தால் பாழாம்பாரே. ()

பாழாகி நகரெல்லாஞ் செந்தீப்பற்றும்
படைமன்ன ரரசிழந்து பஞ்சநாடாம்
கோழாகி யிறுக்கமுண்டா மழையுமில்லை
கூத்தாடிச் சிலம்பத்தொழில் கொள்கைபோல
மாழ்வார்கள் பெரியோரைத் தூசித்தோர்கள்
மாழ்வதில்லை வணங்குநித்தஞ் சிந்தையோர்கள்
வாழ்வார்கள் வீரமுண்டாய் தன்மங்கோடி
வாழ்ந்திருக்கும் பெரியோர்க ளிருந்தவூரே.

நாக பற்பம்.

இருந்தவூர்க் குளங்கரையில் குளிர்ச்சியான
யிசங்குநளிர் மால்தேவி துருசுவெள்ளை
பருந்துவது மான்செவியின் கள்ளிச்சாற்றால்
பதமாக ஆட்டியே நாகத்தப்பிப்
பொருந்துமண் சீலைசெய்து குக்குடத்தில்
புடம்போடு யிப்படியே புடந்தானேழும்
மருந்துமது பொருமியப்பா தவளநீறும்
மாசற்ற நாகபற்பம் தொட்டுக்கொன்றே. (63)

ஒன்றான மனோசிலைசேய் சூதம்பூரம்
உருவான கரியுப்பு வீரம்லிங்கம்
நன்றான கெந்தகமும் ரேக்குக்காரம்
நலமான துருசுவெள்ளை பழச்சாற்றாலே

சென்றுட்டு சாமமொன்று அரைத்துவில்லை
திறமான குப்பிக்குள் செந்தூரந்தான்
மன்றுடுந் தில்லைநட ராசர்பூசை
ஆயிகண பதிக்கும்வடு கனுக்குந்தானே. (64)

தானென்ற செந்தூரஞ் செம்பிலூட்டித்
தாக்கக்கேள் சகலசுண்ண மெழுகைவாங்கி
கானென்ற கட்டுப்புக் களஞ்சிநாலு
காரமொடு நவச்சாரங் களஞ்சிரெண்டு
தோனென்ற துருசுவெள்ளை களஞ்சிரெண்டு
தூடியான அரிதாரம் வெள்ளையொன்று
பானென்று கட்டினதோர் கெந்திநாலு
பழச்சாற்றி லாட்டிரவி யுலரப்போடே. (65)

வெள்ளி வேதை.

போடப்பா உப்பாகுங் கட்டினதோர்சூதம்
புகழாகக் களஞ்சிரெண்டு தேனுலாட்டிச்
சாடப்பா வெள்ளிதனில் மஞ்சாடியூட்டித்
தாக்கினதோர் வெள்ளிசெம்பு ஏழுமூணுங்
கூடப்பா மஞ்சாடி தங்கந்தானும்
குறையாது மாத்தேழு பசும்பொன்னுணி
ஆடப்பா யிந்தவித்தை வாதிசெய்தால்
அரிதார வெள்ளையினில் கேட்டிடாயே. (66)

கேட்டிடாய் மிளகுசா ரணையின்சாறு
கெடியாக வாங்கிஅரி தாரந்தன்னை
ஆட்டிடாய் சாமமொன்று வில்லைதட்டி
அழகான கவுதாரிப் புடத்தில்நீறும்
நீட்டியப்பா வெள்ளிதனில் களஞ்சிகொண்டு
நிலையான மாத்தாறுங் காணுங்காணும்
பூட்டியதோர் பூட்டெல்லா மிதுவேபூட்டு
பூரணமாம் ஆரையிலை குறட்டையிலைவாங்கே ()

குறட்டையொடு பெரும்பாலை பிரண்டைபூனீர்
குழம்பாக மெழுகுபோ லரைத்துநன்றாய்த்
துறட்டிபோல் துருசுக்குக் கவசங்கட்டிச்
சூட்டப்பா கவுதாரிப் புடத்தில்நீறும்
பறட்டையிலைக் கிப்படியே துருசுநீறும்
பாரப்பா துருசுவெள்ளை யாடுங்கூட்டு
திறட்டாக அன்புருகிச் சிவனைநோக்கிச்
செய்தவத்தால் வாதிகளே சித்தியென்றே (68)

சித்தியென்ற துருசுவெள்ளை யாசானாலே
செயமாகுஞ் சாக்கு அறு பத்துநாலும்
முத்தியென்ற சூத்திரந்தா னாறுமின்னால்
முக்கியமுள்ள பெரியோர்க்கு யெய்தும்பாரு
பத்திவிட்ட யிடும்பருக்குக் காணுதொன்றும்
பலியாது நூல்தானுங் கிட்டாதய்யா
அத்திதனை யுரித்தணிந்த யீசன்சொன்னார்
ஆத்தாளு மப்படியே சொன்னாள்பாரே. (69)

சொன்னாள்பார் புருவமென்ற லலாடமீதே
தூங்கவே கட்டுமுறை செயநீர்பற்பஞ்
சொன்னாள்பார் செந்தூர மெழுதுகோடி
சொரூபத்தில் வேதையிடப் பொன்னுண்டாக
சொன்னாள்பா ரித்தனையும் வெவ்வேறாகச்
சூட்சமமாய் வெள்ளிவித்தை சூட்டினாள்கேள்
சொன்னாள்பார் மிளகுசா ரணைச்சார்வாங்கிச்
சூதத்தைப் பலம்நிறுத்து ஆட்டுஆட்டே.(70)

ஆட்டுவாய் சாமமொன்று மெழுகுபோல
அப்பனே கோவையுட கிழங்கில்வைத்து
மூட்டுவாய் மனஞ்செய்து ஞானியென்ற
முக்கியமுள்ள புடமிடவே களங்கதாகும்
கோட்டுவாய் கோவையுட கிழங்கையாட்டிக்
குழம்பாகக் காடிதனில் கலந்துகொண்டு
நீட்டுவாய் சாரமது களஞ்சிரெண்டு
நிலையான குகையதனில் செம்பைவைத்தே. ()

செம்பின் ஊறல் போக்க.

செம்புவைத்து உருக்கிநன்றாய்ச் சாய்த்துப்பாரு
திறமாக யீரஞ்சு தரமேசெய்தால்
வம்புசெய்யு மூறலெல்லாம் பறந்தேபோகும்
மாசற்ற படிகம்போல் வெள்ளையாகும்
மூன்புசெய்த ரசக்களங்கைச் செம்பிலூட்ட
முக்கியமாய்த் மாத்திருபத் தஞ்சேயாகுஞ்
செம்பினுட வூறலற்று வெள்ளியானால்
சேறாசங் கட்டுமதில் பதினெட்டாமே. (72)

பதினெட்டா மிச்செம்பு சமனாய்ச்சேரு
பத்தரைதான் குறையாது ஆணிக்கப்பா
யிதினெட்டாம் பாசாணந் தன்னைக்கட்ட
யியம்புகிறேன் நன்றாகக் களங்கதாக்கு
பதினெட்டாஞ் சிவந்தலைகயான் தன்னிலாட்டி
வாங்கியே பாசாணந் தனக்குஅப்பி
கதினெட்டாஞ் சீலைசெய்து புடந்தான்காடை
கணக்காக யிப்படியே புடந்தானஞ்சே. (73)

புடமஞ்சு மானபின்பு கருவைக்கேளு
பூட்டடா துருசுவெள்ளை கட்டினதோருப்பு
திடமஞ்சு நவச்சாரங் காரஞ்சீனஞ்
சேர்த்தாட்டிப் பூசிநன்று யுலரவைத்து
விடமஞ்சு மிலையரைத்து மண்டையோடு
விளம்பரிய அண்டநீர் மூன்றுஞ்சேர்த்து
வடமஞ்சு சுத்தியிரு சீலைசெய்து
வணங்கியே சிவன்பாதம் புடந்தான்போடே. ()

போட்டபின்பு பாசாண மகத்தாங்கட்டு
பூட்டுவாய் ரசக்களங்கு தன்னைச்சேரு
நீட்டிடவே வெள்ளியது பொய்யாதப்பா
நினைவழிந்து படபடெனச் செய்யாதே நீ

நாட்டவே யினங்கண்ட வாதியானால்
நல்மான வேதையப்பா திறமதாகும்
பாட்டெல்லாங் கற்றதொரு வீணனென்ற
பயல்களுக்கு ஒருநாளும் பலியாதெண்ணே. (75)

பலியாது யென்றுரைத்த குருவேயய்யா
பலிப்பதுதா னாருக்கு நன்றாய்ச்சொல்வீர்
ஒலியான யிடிசத்தஞ் சங்கிலேசை
உருமுகின்ற வெளியொளியாஞ் சுழினைவீட்டில்
வலியான ஆசைவிட்டுச் சோபந்தள்ளி
மன துருகிக் கனிந்தாக்கால் பழிக்குமல்லால்
பலியாது துற்சனர்க்குப் புலத்தியனே அய்யா
பாரென்று சிவன்சொன்னார் பகர்ந்திட்டேனே·()

நூல் பெருமை.

பகர்ந்திட்டேன் ஆயிரத் திரனூறுசூத்திரம்
பாடினேன் யெண்ணூறு முன்னூறோடு
பகர்ந்திட்டேன் பூனீரு அன்பதுக்குள்
பரிவான களிச்சுண்ணந் திறந்துநன்றாய்
பகர்ந்திட்டேன் சூத்திரந்தான் பதினாறுக்குள்
பாரப்பா சுருக்கமென்ற சூட்சனூலே. (77)

நூலான சூத்திரந்தா னூறுமின்னூல்
நுட்பத்தில் செய்கின்ற வாதத்தங்கம்
பாலாகும் பசிதீரும் வாதிகளே சொன்னேன்
பாரிலுள்ள வீணருக்கு னூலீய்ந்தாக்கால்
யேழான நரகத்தில் வீழ்ந்துவீழ்ந்து
மிறவாமல் வழிபார்த்து யிருப்பாரப்பா
சேலான விட்டகுறை யெய்திடுவாராகில்
திறமாயென் னூலெல்லா வசமதாமே. (78)

வசமாகு மல்லாமல் புலம்புவோர்க்கு
வாராது வாராது யென்னபட்டும்
கசமால வாதியுடன் வாய்பேசாதே
கருக்குருவாய் வேதைசெய்யு மின்னூல்கிட்டில்

நிசமாகும் பிர்மகுலத் துதித்தோனுகில்
நிலையான சோதிஒன்றுமறியமாட்டான்
திசமான அண்டமெல்லாஞ் சோதித்தாக்கால்
திறமாக யின்னூல்பார்த் தேறுவானே. (79)

யேறுவார் பெரியோர்கள் ஞானயோகி
இந்தநூல் கிட்டாட்டா லெருமைமாடு
சேருவார்ரவர்பதத்தில் பன்னிரெண்டாண்டு
திறமாகக் கார்த்தாக்கா லெப்படியுமுன்னே
யேகுவார் குணமறிந்து சேர்ப்பாரய்யா
விட்டகுறை யெல்லோர்க்கு மூண்டோசொல்லு
தேருவாய் விட்டகுறை அறிவதேது
செகந்தனிலிந் நூல்கிட்டில் சித்தன்ருனே. (80)

சித்தனென்ற வகையேது புலத்தியாசொல்வேன்
செல்வமென்ற பேர்களுக்கு வழலையாதி
கத்தனென்ற பேர்களுக்கு ஞானமாதி
கருவென்ற வித்துக்கு நாதமாதி
பத்தனென்ற பேரேது களிந்தால்மூலம்
பணிந்ததினுல் பூரணமாம் பார்த்துக்கொள்வாய்
முத்தனென்ற சிவயோகி யேதுனுலே
மூனமடங்கி மனமுருகி முத்திகாணே. (81)

வெள்ளி வேதை.

காணவே நவச்சாரம் வீரம்வெள்ளை
காரமுடன் சூதமைந்துஞ் சமனுய்ச்சேர்த்து
பூணவே கோவையுட கிழங்குநீரால்
புகழாக அரைத்துவில்லை நன்ருய்க்காய்ந்தால்
பேணவே கோவையுட சாம்பலிலேவைத்துப்
புடமிடுவாய் கவுதாரி களங்கதாகும்
தோணவே படிகமாஞ் செம்பிலூட்டு
சுத்தவெள்ளி பதினுறு மாத்தாம்பாரே. (82)

துருசுச் சுண்ணம்.

மாத்தாகுங் கண்டங்கத் திரியின்வேரும்
வளமாக அரைத்ததனைத் துருசுக்கப்பி

போத்தான சீலைசெய்து காய்ந்தபின்பு
பூட்டுவாய் காடையொரு புடத்தில்சுண்ணம்
வேத்தாக யிப்படியே வீரஞ்சேர்த்து
வேண்டமட்டுந் தொந்தமிடு கடுங்காரமாச்சு
சேத்தாலே யிதினாலே சூதங்கட்டுஞ்
செப்பரிது யிதின்பெருமை தேசத்தோர்க்கே. (83)

தேசத்தோர்க் கித்தொழிலைச் சொல்லவேண்டாஞ்
செப்பக்கேள் சாயவேர் தன்னால்வங்கம்
மாசத்து நீருமடா சூதங்கட்டும்
மால்தேவி திருசுலிங்கம் நாகம்கட்டும்
நீசத்தே வங்கரசம் அருசுவெள்ளை
நிலையாகும் நாகம்லிங்கம் பொன்னுக்காதி
பாசத்தோர் தங்களுக்குச் சூட்சமெல்லாம்
பகர்ந்திட்டே னில்லையடா நாகங்கேளே. (84)

நாகத்தைக் கத்தரிவேர் வங்கங்காரம்
நவச்சாரம் கானமுருங் கிலைச்சாற்றாட்டி
பாகமா யரைத்துருட்டிப் பொதிந்து நன்றாய்ப்
பத்தெருவில் புடமிடவே பார்க்கவொண்ணா
நாகத்தை ஆட்டிவிடு மணிபோல்வெண்மை
நல்லசெம்புக் கொன்றிடவே யாற்றிருகும்
பாகத்தைச் செய்தபின்பு சாக்கெல்லாங்கட்டும்
பரமான மூலிகைக்கு யெல்லாஞ்சாகுங்
கானகத்தின் மூலிகைக்கு யிப்படியேயாகுங்
கல்தும்பை மூலிக்குங் கரையில்லாதே. (85)

எல்லாம் யேக மூலிகை யென்பது.

கரையில்லா வெடியுப்பு நன்றாய்க்கட்டுங்
காட்டுள்ளி வசம்பிலையுங் கொல்லுங்கொல்லுங்
துறையெல்லாம் பேய்மிரட்டிக் கொத்தான்மிட்டான்
தூதளையோ டெந்தெத்த மூலியெல்லாம்
வறையில்லாச் செய்திபுண்டா மேதென்றாக்கால்
அப்பனே யேகமூ லிகையிலேதான்
மறைவில்லை சொல்லக்கேள் புலத்தியனே அய்யா
மடக்கலாங் கோடிவித்தை தொந்தந்தானே. (86)

நிசமாகும் பிர்மகுலத் துதித்தோனாகில்
நிலையான சோதிஒன்றுமறியமாட்டான்
திசமான அண்டமெல்லாஞ் சோதித்தாக்கால்
திறமாக யின்னூல்பார்த் தேறுவானே. (79)

யேறுவார் பெரியோர்கள் ஞானயோகி
இந்தநூல் கிட்டாட்டா லெருமைமாடு
சேருவாரவர்பதத்தில் பன்னிரெண்டாண்டு
திறமாகக் கார்த்தாக்கா லெப்படியுமுன்னே
யேகுவார் குணமறிந்து சேர்ப்பாரய்யா
விட்டகுறை யெல்லோர்க்குமுண்டோசொல்லு
தேருவாய் விட்டகுறை அறிவதேது
செகந்தனிலிந் நூல்கிட்டில் சித்தன்றானே. (80)

சித்தனென்ற வகையேது புலத்தியாசொல்வேன்
செல்வமென்ற பேர்களுக்கு வழலையாதி
கத்தனென்ற பேர்களுக்கு ஞானமாதி
கருவென்ற வித்துக்கு நாதமாதி
பத்தனென்ற பேரேது கனிந்தால்மூலம்
பணிந்ததினால் பூரணமாம் பார்த்துக்கொள்வாய்
முத்தனென்ற சிவயோகி யேதுனாலே
மூனமடங்கி மனமுருகி முத்திகாணே. (81)

வெள்ளி வேதை.

காணவே நவச்சாரம் வீரம்வெள்ளை
காரமுடன் சூதமைந்துஞ் சமனாய்ச்சேர்த்து
பூணவே கோவையுட கிழங்குநீரால்
புகழாக அரைத்துவில்லை நன்றாய்க்காய்ந்தால்
பேணவே கோவையுட சாம்பலிலேவைத்துப்
புடமிடுவாய் கவுதாரி களங்கதாகும்
தோணவே படிகமாஞ் செம்பிலூட்டு
சுத்தவெள்ளி பதினாறு மாத்தாம்பாரே. (82)

துருசுச் சுண்ணம்.

மாத்தாகுங் கண்டங்கத் திரியின்வேரும்
வளமாக அரைத்ததனைத் துருசுக்கப்பி

போத்தாண சீலைசெய்து காய்ந்தபின்பு
பூட்டுவாய் காடையொரு புடத்தில்சுண்ணம்
வேத்தாக யிப்படியே வீரஞ்சேர்த்து
வேண்டமட்டுந் தொந்தமிடு கடுங்காரமாச்சு
சேத்தாலே யிதிறைலே சூதங்கட்டுஞ்
செப்பரிது யிதின்பெருமை தேசத்தோர்க்கே. ()

தேசத்தோர்க் கித்தொழிலைச் சொல்லவேண்டாஞ்
செப்பக்கேள் சாயவேர் தன்றால்வங்கம்
மாசத்து நீறுமடா சூதங்கட்டும்
மால்தேவி திருசுலிங்கம் நாகம்கட்டும்
நீசத்தே வங்கரசம் திருசுவெள்ளை
நிலையாகும் நாகம்லிங்கம் பொன்னுக்காதி
பாசத்தோர் தங்களுக்குச் சூட்சமெல்லாம்
பகர்ந்திட்டே னில்லையடா நாகங்கேளே. (84)

நாகத்தைக் கத்தரிவேர் வங்கங்காரம்
நவச்சாரம் கானமுருங் கிலைச்சாற்றுட்டி
பாகமா யரைத்துருட்டிப் பொதிந்துநன்றாய்ப்
பத்தெருவில் புடமிடவே பார்க்கவொன்றை
நாகத்தை ஆட்டிவிடு மணிபோல்வெண்மை
நல்லசெம்புக் கொன்றிடவே மாற்றீருகும்
பாகத்தைச் செய்தபின்பு சாக்கெல்லாங்கட்டும்
பாமான மூலிகைக்கு யெல்லாஞ்சாகுங்
கானகத்தின் மூலிகைக்கு யிப்படியேயாகுங்
கல்துரும்பை மூலிக்குங் கரையில்லாதே. (85)

எல்லாம் யேக மூலிகை யென்பது.

கரையில்லா வெடியுப்பு நன்றாய்க்கட்டுங்
காட்டுள்ளி வசம்பிலையுங் கொல்லுங்கொல்லுந்
துறையெல்லாம் பேய்மிரட்டிக் கொத்தான்மிட்டான்
தூதளையோ டெந்தெந்த மூலியெல்லாம்
வறையில்லாச் செய்தியுண்டா மேதென்றுக்கால்
அப்பனே யேகமூ லிகையிலேதான்
மறைவில்லை சொல்லக்கேள் புலத்தியனே அய்யா
மடக்கலாங் கோடிவித்தை தெரிந்தத்தானே. (86)

கோடிவித்தை தொந்தங்கள் செய்யவேண்டிக்
கூறுகிறேன் பூனீற்றை வாரிக்கொண்டு
ஆடியிதை உத்தமமாந் தாளிச்சாற்றால்
அரைத்துருட்டி வில்லைதட்டிப் புடத்தைப்போடு
வாடி நீ திரியாதே அஞ்சுதர மானால்
மகத்தான சுண்ணமாஞ் சமனாய்க்கண்டர்
காடியே சவ்வீரம் பூரம்ரெண்டுங்
கால்களஞ்சு முன்சாற்றா லாட்டுவாயே. (87)

ஆட்டியே வில்லைதட்டிச் சுண்ணத்துள் வைத்து
அரகரா யெரித்திடவே சுண்ணமாச்சு
பூட்டியே சூத்திரத்தில் சொன்னமார்க்கம்
பொய்யல்ல மெய்யாகும் புலத்தியனே அய்யா
பூட்டுவாய் துரைதோறு மிந்தச்சுண்ணம்
புகழ்பெரிய யீசுபரனார் சொன்னவாக்கு
நாட்டியே சுருக்காகும் பாருபாரு
நல்லசுண்ண மிக்கருவை நவிலொண்ணாதே. (88)

நவிலுகிறேஞ் சிப்பிக்குள் சூடனிட்டு
நன்றான செலம்வாங்கி செலத்துக்குள்ளாய்
நவிலுகிறேங் கரியுப்புச் சீனமோடு
நவச்சாரம் வெடியுப்புப் போட்டுக்கிண்டு
நவிலுகிறேம் அடுப்பேற்றி யெரித்துவாங்கு
நன்றாகக் கட்டுமிந்த உப்பினாலே
நவிலுகிறேம் நவிலுகிறேம் செந்தூரஞ்செய நீர்
நலமாகக் கட்டுவெகு வேதையாமே. (89)

குருச் சுண்ணத்தா லாகு மேன்பது.

ஆமப்பா கோடான கோடிவித்தை
ஆடலா மூப்பினுட ஆட்டுஆட்டு
சாமப்பா வெள்ளுள்ளி நொச்சிகோடி
சாரையண்டங் காக்கைமயி லுடும்பு ஆந்தை
காமப்பால் பச்சோந்தி கோழிபுல்வாய்
கடுவாய்மீன் மூயலறணை வாலான்கிள்ளை

ஓமப்பா சாணிப்பூ ளுகங்கொக்கு
உள்ளொட்டிச் சீவசெந்து வென்றதெல்லாம் ()

யென்றதெல்லா மொவ்வொன்றாய்த் தயிலம்வாங்கி
யிணங்கன்நவச் சாரமிரு பத்துநாலுங்
கண்டதெல்லாம் வெவ்வேறே சுருக்குத்தாக்கு
கட்டுமடா கோடிவித்தை கரைகொள்ளாது
யென்றதெல்லாஞ் சகலகுருச் சுண்ணம்வேணும்
யிழுக்கிழுக்கத் தொந்தங்க ளனேகங்கோடி
அன்றெனக்குப் பொதிகைதனில் சொன்னாரீசன்
அப்பனே புலத்தியனே யுனக்குச்சொன்னேன்.

சொன்னதொரு மாங்கிசத்தின் தயிலஞ்சொன்னேன்
சூட்சமாய்ச் செந்தூரம் பற்பஞ்சொன்னேன்
சொன்னதொரு யேகமூ லிகையின்போக்குச்
சூட்டினேன் கட்டுமுதல் களங்கஞ்சொன்னேன்
மன்னதொரு தேவியுட பூசைசொன்னேன்
மனந்தானும் நிலைசொன்னேன் ஞானஞ்சொன்னேன்
விண்ணதனை நித்தநித்தம் பார்க்கச்சொன்னேன்
விளங்கியதோர் சிவரூபக் குணஞ்சொன்னேனே.

செம்பில் வெள்ளி வேதை.

குணஞ்சொன்னேன் பெரியோர்க ளிருக்குஞ்செய்கை
கூத்தான நடனத்தின் சார்புசொன்னேன்
இனஞ்சொன்னேன் பின்புகேள் மெழுகுமார்க்கம்
யியம்புகிறேன் பொரிகாரங் களஞ்சுநாலு
மணஞ்சொன்னேன் வீரம் பூனீருகுதம்
மனோசிலைசேய் கெந்தகமுந் துருசுலிங்கம்
தனஞ்சொன்னேன் பூரமொடு மிணக்கன்சீனம்
சமன்சேர்த்துப் பழச்சாற்று லாட்டிவாங்கே. (93)

வாங்கியே காண்டிக்குள் போட்டுநன்றாய்
வற்றவெரி பழச்சார்விட் டப்பாகேளு
பாங்கியே அரைத்துருட்டி யிப்படித்தான் நன்றாய்ப்
பத்துவிசை சென்றபின்பு மெழுகுமாகும்

வாங்கியே செம்பிலிடு ஏழுவெள்ளி
மாத்தாகும் பசும்பொன்னாங் குறைந்திடாது
ஓங்கியே கயிலாசம் கொள்ளையாச்சு
ஓகோகோ யின்னமொரு செய்திகேளே (94)

லிங்கக் கட்டு வேதை,

கேளுநீ யெட்டிவிரை வாங்கிமைந்தா
கெடியான கையான்சார் விட்டுஆட்டி
வாளுநீ சுத்திசெய்த லிங்கத்துக்கு
மாட்டியே காடையொரு புடந்தான்போடு
மாளுமே லிங்கமது யிருகிக்கட்டும்
மைந்தனே நாளொன்றில் செய்யும்வித்தை
ஆடுமே பாடாவரைத் தளிரோடப்பா
ஆலங்கொழுந்து புல்லாமணக்கு யிலைச்சாற்றாலே

சாத்தாலே ஆட்டிலிங்கந் தனக்குப்பூசிச்
சாதகமா யிரண்டெருவில் புடத்தைப்போடு
பாத்தாலே யிப்படியே அஞ்சுபுடமிட்டுப்
பண்பாகக் கோழியொரு புடத்தைப்போடு
மாத்தாலே யெடுத்துப்பார் களங்கதாகும்
வளமாகச் சுத்தசெம்பில் மூன்றுக்கொன்று
சேத்தாலே வெள்ளியது ஒன்பதுக்குள்
திறமாக மாத்துபதி னைன்றாம்பாரே. (96)

பாரடா சிவன்வேம்பு மூலமாட்டிப்
பரிவான லிங்கத்துக் கங்கிபூட்டிக்
காரடா ஊமத்தங் காய்க்குள் வைத்துக்
கனமாகச் சீலைசெய்து மூழப்புடத்தி
லாரடா செய்தபின்பு யெடுத்துப்பாரு
அப்பனே லிங்கமது யிடைவிடாது
சேரடா செம்புதான் மூன்றுக்கொன்று
சேர்க்கமதி யேழுஞ்சேர்த் தருக்கிப்பாரே.(97)

சேர்த்துருக்க வயதெட்டு பசும்பொன் தங்கஞ்
செப்பக்கேள் கருக்களெல்லாஞ் சொன்னேன்தோசம்
பார்த்திருக்கும் வாதிகளே யென்னூலீயாதே
மாழுவாய் நூலீய்ந்தால் மனதிலெண்ணு
போத்திருக்குந் தேவியொடு சிவனைப்பூசி
பூணவே கணபதியும் வடுகனையும்பூசி
தாத்திருக்க லாகாது பூசைபண்ணு
தப்பாது வேதையென்ற சாங்கமெல்லாம். (98)

சாங்கமென்ற பூரணத்தின் கண்ணேக்காலே
சாதகமா மிருநேரம் பார்க்கவேணும்
பாங்கமென்ற நாதவெளி ஒளியுங்காணும்
பானுவைப்போல் பராபரனும் பச்சமாகுந்
தீங்கொன்றும் நினையாதே யின்னூல்பார்த்தால்
சிவசிவா கர்த்தாவே யென்றுசொல்லு
சாங்கமென்ற வேதசித்தி கற்பஞ்சித்தி
தட்டுண்ட குணம்போச்சு மனம்வேறாச்சே .()

மனம்வேறு பூரணமே யென்றுபூணு
வாழ்வதல்லால் மற்றொன்றுஞ் செய்யாதய்யா
மனம்வேறு தட்டுண்டா லெல்லாம் போச்சு
மாய்கையுற்றுத் திரிந்தலைவான் மாழ்வானய்யோ
மனம்வேறாய்ச் சாதகமாய்ச் சாத்திரத்தைப்பார்த்து
மனம்லபிக்கக் குருவினிடம் வணங்கிநின்றால்
மனம்வேறு வாராது சித்திமுத்தி
வாய்க்குமே சூத்திரந்தா னூறுமுற்றே. (100)

அகத்தியர் சுருக்க சூத்திரம் 100 முற்றிற்று.

உ

பரமபதி துணை.

அகத்தியர்

# வகார சூத்திரம் 200 க்கு அட்டவணை.

அகத்தியர் வகார சூத்திரம் அட்டவணை முற்றிற்று.